உ
ஓம்
பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.



| தொகுதி | சுக்கிலஹு சித்திரைமீ கஉ | பகுதி |
| --- | --- | --- |
| 14 | 1929ஹு ஏப்ரல்மீ 13உ | 10 |

## கடவுள் வணக்கம்.

கண்ணார நீர்மல்கி யுள்ளநெக் குருகாத
கள்ளனே னுலுமோ
கைகுவித் தாடியும் பாடியும் விடாமலே
கண்பனித் தாரைகாட்டி
அண்ணு பரஞ்சோதி யப்பா வுனக்கடிமை
யானெனவு மேலெழுந்த
அன்பாகி நாடக நடித்ததோ குறைவில்லை
யகிலமுஞ் சிறிதறியு மேல்
தண்ணரு ளின்னதரு ளறியாத தல்லவே
சற்றேனு மினிதிரங்கிச்
சாசுவத முத்திநிலை யீதென் றுணர்த்தியே
சகசநிலை தந்துவேறொன்
றெண்ணமு முள்ளபடி சுகமா யிருக்கவே
யேழையேற் கருள்செய் கண்டாய்
இகபர மிரண்டினிலு முயிரினுக் குயிராகி
யெங்குநிறை கின்ற பொருளே. (1)

ஆரா வமுதென மோனம் வகித்துக்கல் லாநிழற்கீழ்ப்
பேராது நால்வ ருடன்வாழுங் கண்ணுடைப் பேரரசே
தீரா யுரகவுள் ளன்புதந் தேசுக நிட்டையை நீ
தாரா விடினென் பெருமூச்சுத் தானத் தனஞ்சயனே. (2)

ஆரணங்க ளாகமங்க ளியாவுமே யானந்த
பூரணமே யுண்மைப் பொருளென்னுங்—காரணத்தை
யோராயோ யுள்ளுள்ளே யுற்றுணர்ந்தவ் வுண்மையினைப்
பாராயோ நெஞ்சே பகர். (3)

# அரும்பொருள் விளக்கம்

1. எல்லாம் வல்ல இறைவனே! உனது உண்மை நிலையினை உள்ளபடியறிந்து உன் கல்யாண குணங்களில் அன்பு செலுத்தி வழிபடும் ஆற்றல் எனக்கில்லை. ஆயினும் உன் மெய்யடியார்களைக் கண்டு, அவர்களைப்போல் நடிக்க ஆசை கொண்டு, கைகூப்பி ஆடவும் பாடவும், கண்களிலிருந்து தாரை தாரையாக நீர்ப்பெருக்கை யுண்டாக்கி வீழ்த்தவும், அண்ணா! பரஞ்சோதி! அப்பா! நான் உனக்கு அடிமை யென்று வாய்விட்டுச் சொல்லவும் துணிந்தேன். இவ்வுண்மையை இந்த உலகம் ஒருவாறு அறியுமென்றால் உள்ளும் புறம்புமாக எங்கும் நிறைந்துள்ள உன் திருவருளறியாமற் போகுமோ? சர்வேசா! பொய்யனாகிய என்னையும் மெய்யனாக்கி யருள்புரிய நீ சிறிது திருவுள்ளங் கொள்ளவேண்டும்; அழிவின்றி யென்றுமுள்ள முத்திநிலை யின்னதென்பதை எனக்குத் தெரிவித் தருளவேண்டும்; சகச நிலையைத் தந்தருள வேண்டும்; உன் பற்றிலன்றி வேறெப்பற்றிலும் என் மனம் புகாமல் ஆனந்த மயமாயிருக்க நீ கிருபை செய்யவேண்டும் என்று இப்பாட்டில் ஆசிரியர் இறைவனை நோக்கி விண்ணப்பித்துக் கொள்ளுகிறார்.

கடவுளிடத்தும் அவனடியாரிடத்தும் மெய்யன்புண்டாவது மிகவும் அரிது. அது இறைவனுடைய திருவருளால் தான் சித்திக்க வேண்டும். மேலுமேலும் பிறவித் துன்பத்தி லாழ்த்தக்கூடிய இந் நிலவுலகப் பற்றில் வெறுப்புற்று, பக்தி வலையிற் படுபவனும், அப் பக்திக் கிருப்பிடமான அடியவர்க் கெளியவனுமாகிய இறைவனை வழிபடும் உண்மை யடியார்க் குண்டாகும் சிறப்பைப் பார்த்து, அத்தகைய நற்குண நற்செயல் கைவரப்பெறாத சிலர், மயிலாடக் கண்ட வான்கோழி அம்மயிலை யொத்துத் தன் பொல்லாச் சிறகை விரித்தாட முயல்வதுபோல் நடிப்பது சகஜம். இது போன்ற நடிப்பே தங்கள் உண்மை நடிப்பு மென்று பெரியோர்கள் கூறுவது உபசாரம். "நாடகத்தால் உன்னடியார்போல் நடித்து" என்று மணிவாசகப் பெருமானும் வழங்கியுள்ளார்.

நீர் மல்கி = நீர் ததும்பி; நெக்கு = நெகிழ்ந்து, விடாமல் = இடையறாமல்; பனி = குளிர்ச்சியான; சகசம் = உண்மை.

2. எனக்கு அந்தரங்கமான அன்பைக் கொடுத்து ஆனந்தமயமாகிய நிஷ்டையை யளிக்காவிடின் அது காரணமாக என்னிடம் உண்டாகும் பெருமூச்சு தனஞ்சயனென்னும் காற்றாகவே முடியுமென்று இறைவனை நோக்கி இப் பாட்டில் கூறுகிறார்.

பத்துவித வாயுக்களில் தனஞ்சயன் என்னும் வாயுவும் ஒன்று. அதுவுயிர் நீங்கிய பின் தலையைப் பிளந்துகொண்டு போவது.

ஆராவமுது = தெவிட்டாத அமுதம். கல்லான் நிழல் = கல் ஆலமரத்தின் நிழல். போராது = நீங்காமல். நால்வர் = சனகாதி முனிவர்கள். சுக நிஷ்டை = சிவராஜ யோகம். இந்நிஷ்டை சிவஞானத்திற்கு அங்கமாம்.

3. மனமே! வேதாகம புராணங்கள் சுகமயமான நிறைவையே மெய்ப்பொருளென்று சொல்லும். இக் காரணத்தை நீ ஆராய்ச்சி செய்யவில்லை போலும்; உள்ளத்திலேயே நோக்கி யறிந்து அந்த மெய்ம்மையைப் பார்க்க மாட்டாயா சொல் என்று தமது நெஞ்சத்தை நோக்கி இப்பாட்டில் கூறுகின்றார்.

ஆரணம் = வேதம். பூரணம் = நிறைவு. ஓர்தல் = ஆராய்ந்தறிதல்.




## சமயமும் சமூகமும்.

ஒவ்வொரு நாட்டிற்கும், ஜனசமூகத்திற்கும் உயிர் நாடியாகிய ஜீவசத்து ஒன்று உள்ளதென்பது உண்மையாயின் இந்திய நாகரிகத்தின் ஆணிவேர் மதமென்பதை ஒருவரும் மறுக்க முடியாது. பாரத நாட்டைப் போல் மதத்தைப் பற்றிய ஆராய்ச்சி வேறு எந்த நாட்டிலும் அவ்வளவு தூரம் செய்யப்படவில்லை என்பது வாஸ்தவமே. நெப்போலியன், வாஷிங்டன், லெனின் என்னும் மேதாவியர் மேனாடுகளில் இவர்கள் தெய்வப் பிறவியரோ, என்று பிறர் போற்றத்தக்க பெருங் காரியங்களைச் செய்திருக்கின்றனர். ஆனால் இந்தியாவில் அத்தகைய மதிப்புக்குப் பாத்திரமாகக் கூடியவர்கள் சங்கரர், புத்தர், இராமாநுஜர் முதலிய ஆன்ம வீரர்களே யாவர். இத்தன்மை வாய்ந்த மகோன்னதமான சமயப் பெருமையாலேயே இந்திய நாடும் அதன் நாகரிகமும் பல்லாயிரம் வருடங்களாக எத்தனையோ எதிர்ப்புக்களினிடையிலும் தம் இளமை மாறாது தலைமையாய் நிற்கின்றன. மேல் நாட்டார் மேலே தமது உணர்வை நாட்டார்களென்றும், கீழ் நாட்டாராகிய நாம் கீழே நமது உணர்வை நாட்ட மாட்டோமென்றும் வெறுமனே விளையாட்டிற்காகச் சொல்லப்படும் கூற்றிலுங் கூட உண்மை யிருக்கிறது. பொதுவாக, ஒரே வார்த்தையில் கூறவேண்டுமாயின் நமது பூமியே ஞான பூமியாம்.

இத்தகைய உன்னதமான மத வாழ்க்கையில் வாழ்ந்து வந்த நமது புண்ணிய பூமியில் ஒரு பக்கம் மேனாட்டு நாகரிக வெள்ளம் நமது உள்ளத்தைத் தாக்குவதாலும், மறு பக்கம் நமக்குள்ளேயே இருக்கும் சமூகக் கொடுமைகளாலும் மனிதனுக்கு மதம் அவசியமா என்ற கேள்வி கூட நம்மிடையில் வந்து விட்டது. மதம் என்பது மனிதனைச் சேற்றில் நெளியும் புழுவைப் போன்ற உலக போகப் புன்மை வாழ்க்கையினின்றும் விடுவித்து அழியாத பேரின்

பப் பெருஞ்சித்திப் பெருவாழ்வில் இருத்துவதே யாகும். ஆங்கிலத்தில் மதம் என்ற சொல்லுக்கு 'மூலத்தை அடைதல்' என்று பொருள். மூலப் பொருளாகிய கடவுளை யடைந்தார்க்குத் துன்பமில்லை, கேடில்லை, அச்சமில்லை; ஆண்மையுண்டு, வீரமுண்டு, ஆனந்தமுண்டு. இத்தகைய பெருமை பெற்ற நிலையை யாவனே விடத்துணிவன். ரோஜா மலர் முட்களால் சூழப்பட்டிருப்பினும் அதனுடைய அழகிற்கோ அன்றி மென்மைக்கோ கேடுண்டாவதில்லை. அது போன்று மதத்தைச் சூழ்ந்துள்ள சில குறைகளினால் மதமே பொய்யாகி விடாது. அச் சிறு காரணத்தைக்கொண்டு அதை முழுதும் விடத் துணிவோர் அறிவாளிகளாகார்.

மனிதன் உலகத்தின் போகங்களினால் திருப்தி யடைவதில்லை. எப்பொழுது பார்த்தாலும், இன்பத்தை நாடிப் பேய்போ லலைகின்றான். ஆனால் இன்பமும் இவனை விட்டு ஓடிக்கொண்டே யிருக்கிறது. ஒரு பொருளைப் பற்றுகின்றான். ஆங்கு மனப் பூரணமான இன்ப மடைந்ததாக நினைக்கின்றான். அடுத்த விநாடி அது துன்பக் களமாய் விடுகின்றது. இமாலயத்தில் இன்பம் பயக்கும் கம்பளிப் போர்வை சகாராப் பாலை வனத்தில் துன்பம் பயப்பதாய் விடுகின்றது. அருணகிரியார் இவ்வுலகை 'பிரபஞ்ச மென்னும் சேறு' என்கின்றார். உண்மையில் இவ்வுலகமே பெரும் சேறு. அதனுள் ஒரு காலை வைத்தாற் போதும். அதை எடுக்க மற்றொரு காலை வைக்கவேண்டும். இவ்வாறே குளிக்கப் போய்ச் சேற்றைப் பூசிக் கொண்ட கதையாய் இன்பந் தேடித் துன்பமடைவதே மிச்சமாக இருக்கிறது. ஒன்றை விட்டொன்று பற்றி எப்போதும் ஆசைக் காற்றில் அலையும் பஞ்சாக மனிதன் விளங்குகின்றான். அழியும் பொருள் யாவையினும் அவனுக்குச் சாந்தி யுண்டாகவில்லை. இவ்வுலகத்தின் பொய் நடிப்பு, ஏமாற்றம், வஞ்சனை, பொறாமை முதலியவைகளை அறவே ஒழிக்க யோசிக்கின்றான். அப்போதுதான் அவன் தெய்வீகச் சமய வாழ்க்கைப் பாதையில் புகுந்தவனாவான். அன்று முதல் அவனுக்கு இவ்வுலகமே ஓர் கற்பகக் காவாய் விடுகின்றது. எல்லாம் ஒன்றென்று சமரச சுபாவத்தோடு கூடி அசையாது, கலங்காது ஆனந்தத்தில் திளைத்து "எல்லோரும் இன்புற்றிருக்க'ப் பாடு படுகின்றான். அன்பே சிவம், அருளே அதனை அடையும் வழி எனத் தெரிந்து நடக்கின்றான். இவ்வாறான தெய்வ வொழுக்கமே சமய வாழ்க்கை; அடங்காத ஆர்வத்தோடு ஈசனைத் தேடி அவனோடு ஒன்றாகும் அருள் நெறி.

உலகப் பொருள்கள் ஒன்றிலும் திருப்தியும், அமைதியும் காண முடியாத திறத்தினாற்றான் மனிதன் கடவுளைப் பற்றுகின்றான் என்று மேலே கூறினோம். இதனால் உலகத்தை வெறுப்பவனே ஞானி எனக் கொள்ளலாகாது. வெறுப்பென்பது அணுவளவேனும் கொள்

பவன் ஞானியாகான். உலகத்தைப் பொய்யாகவும், துன்பமாகவும் கருதுவதை விட்டு உண்மையாகவும், இன்பமாகவும் காண்பதுவே ஞானம். 'உண்ணும் உணவும் பருகு நீர் தின்னும் வெற்றிலை யெல்லாம் கண்ணன்' என்னும் உணர்ச்சியே சமயத்தின் பெரும்உணர்ச்சி. சுகப் பிரம்மரிஷி 'கடவுளே! கடவுளே!' என்று கூப்பிட்டுக்கொண்டே காட்டில் ஓடினார். அப்போது ஆங்குள்ள கல், மண், மரம், மலர், செடி, கொடி, ஊற்று எல்லாம் ஏன்! ஏன்! என்று கேட்டனவாம். 'சர்வ மிதம் பிர்மா' என்பது எல்லாம் கடவுள் என்னும் வேத வாக்கு. ஆகவே உலகத்தை வெறுப்பவன் அறிஞனாக மாட்டான். ஆனால் அதைப் பொய்யாகப் பாராமல் உண்மையாகக் கண்டு விருப்பத்தோடு அணைத்துக் கொள்பவனே அறிஞன்.

நாம் மேற்சொல்லி வந்த உயரிய நிலையே மதத்தின் உண்மையான உச்ச நிலை. இதனை அடைவதற்கான ஒழுக்கங்களைப் பல்வேறு சமயங்கள் பல்வேறு வகைகளாற் கூறுகின்றன. சமயங்களை ஏற்படுத்திய ஒவ்வொரு பெரியாரும் இந்நிலையை அடைந்தவரே யாவர். ஆனால் அவர்களுக்குப் பின் வந்தோர் அச்சமயக் கோட்டத்தைத் தந்நயங் கருதிப் பாழாக்கி விட்டனர். அதனுடைய புனிதமான பெயரால் பல கேடுகளைப் புகுத்திவிட்டனர் என்பது உண்மையே. இக் கேடுகளெல்லாம் ஒரு மதத்தில் மட்டு மன்று—எல்லா மதங்களிலு முண்டு. ஒரு சமூகத்தில் மதத்தால், அதனுடைய சீரிய ஒழுக்கத்தால் பெருமை யடைந்த ஒரு வகுப்பாரால் சமூகச் சட்டங்கள் பல சமூக நன்மையைக் கோரி ஏற்படுத்தப் படுகின்றன. சிறிது காலத்துள் அச்சட்டம் பழமையால் பெருமையுற்று மக்கள் உள்ளத்திற் பதிந்து அவரது மேனோக்கமாகிய முன்னேற்றத்திற்குத் தடையாக நேருதலும் சாத்தியம். நமது நாட்டிலும் அவ்வாறே நடந்துள்ளது. ஆனால் ஒன்று மட்டும் எல்லோரும் நினைவில் வைத்துக் கொள்ளவேண்டும். அதாவது மதம் வேறு, சமூக சாஸ்திரங்கள் வேறு. மத உண்மைகள் மாறாதவை. சமூகக் கட்டுகள் மாறு படுபவை. மாற வேண்டுவது அவசியமே. நமது சமூக சாஸ்திரங்களும் மாறிக்கொண்டே ஒவ்வொரு தரும சாத்திரமாகப் பல தர்ம சாஸ்திரங்கள் ஏற்பட்டுள்ளன. மனுமுதல் பராசரர் வரை நாற்பதுக்கு மேற்பட்ட ஸ்மிருதிகள் உள. ஆனால் இவைகளெல்லாம் மதமல்ல. நாம் ரோமாபுரிச் சட்டப் புத்தகங்களையும், கிரேக்க நியாய வாதங்களையும், ஆங்கில சமூகத் திட்டங்களையும், திருக்குறள் முதலிய நீதி நூல்களையும் சமய சாத்திரங்களாகப் பாராட்டுவதில்லை. 'மனு தர்மம்' முதலிய தரும சாஸ்திரங்களும் அவ்வாறானவையே. ஒருவன் சாப்பிட வேண்டுவது இவ்வாறு, குளிக்க வேண்டுவது இப்படி, உட்காருவது இம்மாதிரி, வெளிக்குப்போவது இவ்விடத்தில் என்பவையெல்லாம்கூடவா மதம்? ஆகவே மறுமுறையும் மதத்திற்கும் சமூகக் கட்டுப்பாடுகளுக்கும் யாதொரு சம்பந்தமு மில்லை என்பதை வற்புறுத்து

கின்றோம். இவை யிரண்டையும் ஒன்று என நினைக்கும் பிறழ்ந்த உணர்ச்சியால் மதமே பொய்யென்றும், அவசிய மில்லையென்றும் கூறுவது தகாது.

இது ஒருபால் இருக்க, நமது மத வணக்கங்களுக்காக ஏற்படுத்தப்பட்ட கோயில்களும், அவற்றின் பிரசாரத்திற்காக ஏற்பட்ட மடங்களும் மக்களுக்குச் சரியான வகையில் பயன்படுவதில்லை. தீண்டாமை, பாராமை முதலிய நச்சுப் பாம்புகள் நம் சமூக நந்தவனத்தில் மிகுந்து விட்டன. பெண்ணடிமைப் பேய் ஒருபால் தலை விரித்துக் கூத்தாடுகின்றது. சாதிச் சண்டைகள் ஒருபக்கம் மண்டையைப் பிளக்கின்றன. ஒருவருக் கொருவர் பொறாமையும், வெறுப்பும், வஞ்சகமும் கொண்டு அமைதியை அழிக்கின்றனர். எங்கு பார்த்தாலும் ஆடம்பரமான, அமைதியற்ற வாழ்க்கை நாட்டைப் பாழ்படுத்துகிறது. நூற்றுக்குத் தொண்ணூறு பேருக்கு உண்ண உணவில்லை, உடுக்கத் துணியில்லை. கன்னம் ஒட்டிக் கண் குழிந்து போயிருக்கும் அடிமை மக்கள் வெறுக்கத்தக்க வாழ்க்கையில் வாழ்கின்றனர். இச் சமூகக் குறைபாடுகளைக் கண்டு ஒவ்வொரு இந்தியர் மனமும் புழுங்குகின்றது. ஆனால் இவைகள் மக்களின் அறியாமையின் விளைவேயன்றி மதத்தின் விளைவன்று.

மற்றும் மேற்சொல்லப்பட்ட இழிந்த நிலை ஒழியவேண்டுமானால் அன்புநெறி எங்கணும் பரவவேண்டும். அவ்வன்பு நெறியே மதத்தின் சாரம். 'அன்பே சிவ' மென்றும் 'இன்பமே என்னுடை யன்பே' என்றும் பெரியோர் கடவுளைப் போற்றுகின்றனர். இவ்வன்பு நெறியாகிய உன்னதமான நெறியை பாமார்த்திகத்தில் மட்டுமல்ல விவகாரத்திலும் செலுத்துவோ மாயின் உலகத் துன்பங்கள் உடனே ஒழிந்து விடும். ஆகவே முதன்மையாய் நின்று இந்திய நாட்டைக் காப்பது மதநெறியே. 'அரசியல், சமூகம், பொருளாதாரம் முதலியவை யெல்லாம் இரண்டாம் படியே, அவை மதத்தைச் சூழ்ந்தே விருத்தி யடையவேண்டும்' என்று ஸ்வாமி விவேகானந்தர் இந்தியாவைப் பொறுத்த வரையில் சொல்லுகின்றார். இதை விட்டு வேறு வழிகளிற் செல்லுவோமானால் நமது சீர்திருத்தங்க ளெல்லாம் அசாத்தியமாகி விடும். மகாத்மா காந்தியடிகளும் அதையறிந்தே மத வாழ்க்கையின் உயரிய தத்துவமாகிய சத்யாக்ரக நெறியை அரசியலிற் புகுத்திப் பெருமைபெற்றார். நாம் மதவாழ்க்கையில் வாழ்ந்துவர நமக்குக் கடவுள் அருள் செய்வாராக; இச்சமூகக் கட்டுகளையும் அன்பு நெறியோடு சீர்திருத்த வலிமையும் அருள்வாராக.

ஓம் தத் ஸத்.

---

## சந்தா நேயர்களுக்கு
### 15-வது ஆண்டின் முன்னறிவிப்பு.

நம் போதினியின் மீது அன்பு செலுத்திவரும் சந்தாதாரர்களாகிய நண்பர்களே! நாளிது சுக்கில௵ ஆடி௴ கவ (16-7-1929) நம் ஆனந்த போதினிக்கு 15-வது ஆண்டு பிறக்கப்போகிறது. ஆதலின், சந்தாதாரர்கள் ஷ 15-வது ஆண்டின் சந்தாத்தொகையை நாளிது சுக்கில௵ ஆனி௴ கவ (14-6-1929)-க்குள் மணியார்டர் மூலமாகவோ, நேரிலோ செலுத்திவிடும்படி கோருகிறோம். பத்திரிகையை நிறுத்திக்கொள்ள விரும்புவோர் அவ் விவரத்தை ஷ 14-6-1929-க்குள் கார்டின் மூலமாகவோ நேரிலோ தெரிவித்துவிடவேண்டும். மேற்கூறியபடி சந்தாத்தொகையை முன்பணமாகச் செலுத்தி விடுகிறவர்களுக்கு வழக்கம்போல் நாளிது சுக்கில௵ ஆனி௴ சஞ்சிகையும், அதற்குப் பின்வரும் சஞ்சிகைகளும் சாதாரண போஸ்டில் அனுப்பப்பட்டுவரும். பத்திரிகையை நிறுத்திக்கொள்ளும்படி தெரிவித்தவர்களுக்கு நாளிது சுக்கில௵ ஆனி௴ சஞ்சிகைமட்டும் சாதாரண போஸ்டில் வந்துவிடும். இங்குக் குறித்தபடி சந்தாத்தொகையை முன்பணமாக அனுப்பாதவர்களுக்கும், பத்திரிகை தங்களுக்குத் தேவையில்லையென்ற விவரத்தைத் தெரிவிக்காதவர்களுக்கும் அடுத்த 15-வது ஆண்டின் சந்தாத் தொகைக்காக நாளிது சுக்கில௵ ஆனி௴ பத்திரிகை வி. பி. யில் அனுப்பப்படும். இவர்கள் சந்தாத் தொகையை அனுப்பாமலும், பத்திரிகை வேண்டாமென்று தெரிவிக்காமலு மிருப்பதால் பத்திரிகையை வி. பி. யில் பெற்றுக் கொள்ள விருப்பமுடையவர்களாய் இருக்கிறார்களென்று நாங்கள் உறுதி கொள்கிறோம். அதனாலேயே, இவர்களுக்கு வி. பி. யனுப்பப்படுகிறது. ஆதலின், இத்தகைய நண்பர்கள் வி. பி. யைத் திருப்பிவிடாமல் பெற்றுக்கொள்ளும்படி கோருகிறோம். இவ்வாறு வி. பி. யைப் பெற்றுக்கொள்கிறவர்களுக்கும் சஞ்சிகைகள் வழக்கம்போல் அனுப்பப்பட்டுவரும். வி. பி. யில் 3 அணா அதிகச் செலவும், சஞ்சிகை வந்துசேர வீண் காலதாமதமும் நேருகின்றன. ஆதலின், எல்லோரும் முன்பண மனுப்பிவிடுவதே நலம்.

பினாங்கு, சிங்கப்பூர் முதலிய மலேயா நாடுகளுக்கு வி. பி. இல்லையாதலின், அவ்விடங்களிலுள்ள சந்தாதாரர்கள் எல்லோருமே சந்தாத் தொகையை முன்பணமாக அனுப்பிவிடவேண்டும்.

இங்குக் குறிப்பிட்டிருப்பவைகள் எல்லோருக்கும் நன்மை தரக்கூடியனவாதலின் சந்தாதாரர்களாகிய நண்பர்கள் வீண் குதர்க்கம்செய்து நமக்கு வீண் சிரமத்தை யுண்டாக்காமல் இவற்றின்படி நடந்துகொள்ளுமாறு ஒவ்வொருவருக்கும் நினைப்பூட்டுகிறோம். விஷயத்தை யுணராமல் வீண் தர்க்கம்செய்து கடிதங்களெழுதி வேதனையை யுண்டாக்குவோரின் உள்ளப்போக்

கைப்பற்றி வருடந்தோறும் குறிப்பிட்டெழுதியிருக்கிறோம். அவற்றை யுணர்ந்த புத்திமான்களுக்கு அவர்கள் செய்கை நன்மைதராத தென்பதும், நாம் செய்திருக்கும் ஏற்பாடு இருபாலார்க்கும் நலந்தரத்தக்கதென்பதும் விளங்கும். ஆதலின் புத்திமான்கள் நுட்பமாக எல்லாவற்றையும் ஆராய்ந்து வீண்தர்க்கம் செய்யாமல் நம்முடைய ஏற்பாட்டின்படி நடந்துகொள்வார்க ளென்றே நம்புகிறோம்.

முன்பண மனுப்புவோர் பழைய சந்தாதாரர்களாயிருந்தால், மணியார்டர் கூபனில் தங்கள் சந்தாநம்பரைக் குறிப்பிட்டு, "15-வது ஆண்டுக்கு" என்று விவரம் எழுதி யனுப்பவேண்டும். புதிய சந்தாதாரர்களாகச் சேருகிறவர்கள் புதிய ஆண்டுக்கு என்ற விவரம் எழுதி யனுப்ப வேண்டும். பழைய ஒவ்வொரு சந்தாதாரர்க்கும் உரிய சந்தா நம்பர் ஒவ்வொரு மாதத்திலும் வரும் சஞ்சிகையின் மேல் உறையில் வலதுபக்கத்தில் எழுதப்பட்டிருக்கும். சந்தா நம்பர் எழுதுவோர் அதைப்பார்த்துக் கடிதங்கள், மணியார்டர் முதலியவற்றில் எழுதவும்; மேல் உறையின் இடப்பக்கத்தில் 1190 என்ற ரிஜிஸ்டர் நெம்பர் அச்சிடட்பட்டிருக்கும். அதை எழுதக் கூடாது. மேலே குறித்தபடி கையால் எழுதப்பட்டிருப்பதையே குறித்தெழுதவேண்டும். பழைய சந்தாதாரர்களில் சந்தா நெம்பர் தெரியாதவர்கள் முன்பண மனுப்பாமல் வி. பி. யிலேயே சஞ்சிகை பெற்றுக்கொள்வது நலம்.

பழைய சந்தாதாரர்களில் சஞ்சிகையை நிறுத்திவிடும்படி எழுதுவோரும் மேற்குறித்தபடி தங்கள் சந்தா நம்பரைக் குறித்தெழுதவேண்டும்.

ப-ர்.

## லாட்ரி போடுதல்.

ஏழைகள் பாவம் ஜீவனத்திற்கு 'லாட்ரி' போடுகிறார்கள். நடுத்தரமானவர்கள் தங்கள் செலவிற்குப் போதுமான வருவாய் இல்லாமையால் 'லாட்ரி' போடுகிறார்கள். பகவான் ஒவ்வொரு அவதாரத்திலும் மனிதர்கள் படும்பாட்டையும், செய்யவேண்டிய கர்மாக்களையும் தானே செய்து காட்டினார் என்னும் உண்மையை இக்கலியில் மெய்ப்பிப்பதுபோல, முதல் முதலாக ஸ்ரீரங்கம் ரங்கநாதப்பெருமாள் 'லாட்ரி' போட வாரம்பித்தார். அந்த வழியைப் பின்பற்றி ஒவ்வொரு தேவஸ்தானத்திலுள்ள தெய்வமும் வரிசையாக இப்பொழுது லாட்ரி போட வாரம்பித்துவிட்டன. ஒவ்வொருவரும் ஒரு ரூபாய் அரை ரூபாய் என்று தங்கள் அத்யாவசியமான செலவைக் குறைத்துக்கொண்டு 'லாட்ரி' போட வாரம்பித்துவிட்டார்கள். நாட்டில் எங்குபார்த்தாலும் 'லாட்ரி' யாகவே இருக்கிறது. அந்தோ! நம் நாடு போட்ட — போடுகிற 'லாட்ரி' எல்லாம் போதாதா? என்கிறார் ஒரு தாத்தா.

# "நோபல்" பரிசு வரலாறு.

(முருகன்.)

நமது கவிச்சக்கரவர்த்தி ரவீந்திரநாத தாகூரின் பெயர் உலகப் பிரசித்த மாதலதற்கு முக்கியமான காரணம், "கீதாஞ்சலிக்கு" அவர் பெற்ற "நோபல்" பரிசேயாகும். அத்தகைய பெருமையுடைய "நோபல்" பரிசின் வரலாறு "ஆநந்தபோதினி" வாசகர்களுக்கு, மிகுந்த மகிழ்ச்சியளிக்குமென்றெண்ணிக் கீழே தருகின்றோம்.

இந்த "நோபல்" பரிசுநிதி ஸ்தாபனம் செய்த ஆல்ப்ரட் நோபல் என்பார் சுவீடன் தேசத்தில் பிறந்தவர். பரஸ்பர முரண்பாடுடைய பல அரிய குணங்களுக்கு அவர் உறைவிடமாக இருந்தார். பலதிறப்பட்ட வெடிகுண்டுகள், சுரங்கங்கள், வெடி மருந்துகள் முதலிய போர்க்கருவிகளைக் கண்டுபிடித்த அவர் உலகசமாதானத்தை நிலைநிறுத்தவும் பாடுபட்டார்; அவர் நிரீசுராதிபராயிருந்தும் தருமம் செய்யத் தவறவில்லை; அவர் ஏகாந்த வாழ்க்கையில் விருப்பமுடைய ஒரு துறவியாக இருந்தும் மனித சமூகத்தின்மீது அளப்பரிய அன்புடையவராக விளங்கினார்; பொது வாழ்வில் சமரச பாவனையுடையவராக இருந்தும், தன் ஆஸ்தியைக் கையாட்சி செய்யும் பொறுப்பை ஸ்காண்டிநேவியா நாட்டினரிடமே ஒப்படைத்திருந்தார்; விஞ்ஞான சாஸ்திரங்களிலும், நூதன யந்திர நிர்மாணத்திலும் பேராற்றல் உடையவராயிருந்த அப்பெரியார், இலக்கியத் துறையிலும் பாண்டித்தியம் பெற்றே இருந்தார். ஷெல்லி என்ற ஆங்கிலக் கவியின் காவியங்களில் அவருக்கு மிகுந்த பற்றிருந்து வந்தது. ஆங்கிலத்தில் அவர் பல அழகிய கவிகளும் எழுதினார்; சுவீடன் பாஷையில் சில நாவல்களும் வெளியிட்டார்; உயர்ந்த ஆதர்சமுடைய ஒரு யோகியாயிருந்தும் அளவிடற்கரிய திரவியமும் திரட்டி வைத்தார்; மதவிஷயங்களில் அவருக்குச் சிறிதளவும் நம்பிக்கையில்லையாயினும், தேவாலயங்கள் கட்டுவதற்குப் பொருளுதவி செய்தார். இயல்பாகவே வியாகுல மனப்போக்குடைய அவர் விஞ்ஞானசாஸ்திர ஆராய்ச்சிமூலம் மகிழ்ச்சி கண்டார். வாழ்நாள் முழுதும் நோயாளியாகவே இருந்து வந்ததினால் தன் ஆஸ்தியில் ஒரு பகுதியை வைத்தியர்களுக்கு மானியமாக விட்டார். அவர் பிரம்மசாரியாக இருந்தும் பெண்களையெல்லாம் சம பாவனையோடும் அன்போடும் நடத்திவந்தார்.

இத்தகைய விநோத குணங்களுக்கு ஆஸ்பதமான ஒரு திவ்ய புருஷரின் கொடையினாலேயே வருஷா வருஷம் நோபல் பரிசுகள் வழங்கப்படுகின்றன.

எத்தகைய பிரதிபலனையும் எதிர்பாராமலே அவரது பரிசுகள் வழங்கப்படுகின்றன. அவரது பரிசுகளால் வரும் நலத்தை உலகத்திலுள்ள சகல ஜனங்களும் ஜாதிமத வித்தியாசமின்றி அனுபவிக்கிறார்கள். ஒரு ஸ்வீடன் தேசச்சீமானின் பரிசு வங்கபாஷையில் ஒரு நூலெழுதிய கவிரவீந்திருக்

குக் கிடைத்ததே ஆல்ப்ரட் நோபலின் விசாலாச் சிந்தைக்கு ஒரு உத்தம எடுத்துக் காட்டாக இருக்கிறது.

அவரது பரிசுகளால் விஞ்ஞான சாஸ்திரம் நாளுக்குநாள் வளர்ச்சியடைந்து வருகிறது. அவரது பரிசுகளைப் பெறும் ஆவலால் உலகப் பிரசித்தி பெற்ற பண்டிதர்கள் இரவும் பகலும் உழைக்கின்றனர். அதனால் உலகம் பூராவும் நலம் பெருகிறது. சென்ற வருஷத்தில் ஜார்ஜ் பர்னர்ட்ஷா என்ற பெயர் பெற்ற இலக்கிய பண்டிதருக்கு அளிக்க ஏற்பாடாயிற்று. ஆனால் அவர் அதை மறுத்துவிட்டார்.

## பூர்வ சரிதம்.

நமது ஆல்ப்ரட் நோபல் சுவீடன் தேசத்தவர் என்று ஏற்கனவே கூறியிருக்கிறோம். அவரது குடும்பத் தலைவர்களில் ஒருவர் பஞ்சாயத்து நீதிபதியாக இருந்ததாகத் தெரிய வருகிறது. அவர்கால முதற்றான் நமது நோபலின் வமிசாவளிப் பட்டிகைக்குத் தேவையான நம்பத்தக்க செய்திகள் கிடைக்கின்றன. அவர் பதினேழாவது நூற்றாண்டில் வாழ்ந்திருந்தார். அவர் பெயர் பீட்டர் நோபலியஸ், உப்சாலா சர்வகலா சங்கத்தில் அவர் கல்வி பயின்றுகொண்டிருந்தபொழுது, அந்த சர்வகலாசங்க போதகாசிரியர் ஒருவரது புத்திரியை அவர் விவாகம் செய்துகொண்டார்.

பீட்டர் நோபலியசின் பௌத்திரரான விண்டிலா நட்பக்த நோபலியஸ், வடசுவீடனில் வைத்தியராக விருந்தார். அவர் நோபலியஸ் என்ற தன் குடும்பப் பெயரை நோபல் என்று குறுக்கிக்கொண்டார். அவர் காலம் முதற்கொண்டே அவரது குடும்பப்பெயர் நோபல் என வழங்கலாயிற்று. அவரது புத்திரரான எமானுவலின் நோபல் வடசுவீடனில் ஜெம்லோ என்ற இடத்தில் 1801-ல் பிறந்தார். இவரே நமது ஆல்ப்ரட்டு நோபலின் தந்தையார். அவர் காலமுதல் அவரது குடும்பப் பெருமை வெளிநாட்டிலும் பரவத் தொடங்கியது. அவருக்கு இயந்திர நிர்மாணத்திலும் விஞ்ஞான ஆராய்ச்சியிலும் இயற்கை வாசனை யிருந்து வந்தது. ஆனால் அக்காலத்தில் விஞ்ஞான சாஸ்திரிகளுக்கு மதிப்புக் கிடையாது. சாகித்ய பண்டிதர்களுக்கு மட்டுமே அக்காலத்தில் மதிப்பு அளிக்கப்பட்டது. எனினும் அவர் சர்வகலா சங்கத்தில் புகுந்து, காலத்துக் கேற்ற கல்வி பயிலாமல், கப்பல் ஓட்டுந் தொழில் கற்றுக்கொள்வதற்காக, ஒரு கப்பலில் வேலைக்கமர்ந்தார். சிலகாலம் கப்பலில் உத்தியோகம் செய்தபிறகு வீட்டுக்குவந்து சிற்பசாஸ்திரம் பயிலத் தொடங்கினார். இருபத்தி ஆறுவது வயதில் ஸ்டாக்கோம் சாஸ்கேதிகக் கல்லூரியில் ஒரு போதகாசிரியராக உத்தியோகம் பெற்றார். அந்தக் கல்லூரி இப்பொழுது Royal Institute of Technology என்னும் பெயரால் மிகப் பிரபலம் பெற்று விளங்குகிறது. அங்கே ஆசிரியரா யிருந்தபொழுது பல நூதன ஆராய்ச்சிகள் நடத்தி, கடலினடியில் வெடிக்கும் ஒரு வெடிகுண்டை கண்டுபிடித்தார். 1837-ல் இந்த சமாசாரம் ருஷிய அரசாங்கத்தாருக்குத் தெரிய வந்தது. எனவே சர்க்கார் அழைப்புக் கிணங்க அவர் தன் குடும்ப சகிதம் ருஷியாவின் தலைநகரமான செயிண்டு பீட்டர்ஸ்பர்குக்கு சென்றார். ருஷியா சர்க்கார் விஞ்ஞானசாஸ்திர ஆராய்ச்சி நடத்த அவருக்குத் தாராளமாக உதவி செய்தனர். அவருக்காக ஒரு ஆராய்ச்சிசாலையும் கட்டிக் கொடுக்கப்பட்டது. பலமாதிரி வெடிகுண்டுகள் துப்பாக்கிகள் முதலியவற்றை அவர் கண்டுபிடித்தார். கிரிமியா யுத்தத்தில் அவர் கண்டுபிடித்த போர்க்கருவிக

ளெல்லாம் முதன் முதலாக உபயோகப்படுத்தப்பட்டன. அவரது நூதன வெடி குண்டுகளின் உதவியினலேயே ருஷியர்கள் பிரிட்டிஷாரைப் போரில் புறங்கண்டனர்.

அவருடைய நான்கு புத்திரர்களும் அவரது ஆராய்ச்சி தொழிலில் கலந்து உதவிசெய்தனர். நமது கதாநாயகனை ஆல்ப்ரட் நோபல் மூன்ருவது புத்திரர். கிரீமியன் யுத்தம் முடிந்தபிறகு எம்மானுபல் நோபல் குடும்பசகிதம் சுவீடனுக்குத் திரும்பியபொழுது, தன் இரண்டாவது புத்திரனை லட்ஜ்விக் நோபலை செயின்டுபீட்டர்ஸ்பர்க்கு ஆராய்ச்சி சாலை மேல் பார்த்துக்கொண்டிருக்கும்படி விட்டுச் சென்ருர்.

ஸ்டாக்கோமிலும் அவர் வாளா விருக்கவில்லை. நைட்ரோகிளிசரயின் என்ற திராவகத்தை உபயோகித்து, வெடிகுண்டுகள் செய்ய, எமானுபல் நோபல் ஆராய்ச்சி நடத்திக்கொண்டிருந்தார். அவ்வாறு ஆராய்ச்சி செய்திருக்கையில் ஒரு வெடிகுண்டு வெடித்து அவரது இளையமகன் கொல்லப்பட்டதுமன்றி அவரும் படுகாயப்பட்டார். சிறிதுகாலத்தில் காயம் ஆறியதாயினும் அவரது வாழ்நாள் முழுதும் அதனுலுண்டான துன்பத்தை அனுபவித்துக்கொண்டே யிருந்தார். பிறகும் அவரது ஆராய்ச்சியில் பல விபத்துகள் உண்டாயின. கடைசியில் நைட்ரோகிளிசரயின் திராவகத்தை உபயோகித்து ஒருவரும் ஆராய்ச்சி நடத்தக்கூடாதென்று பலதேசங்களில் தடைச்சட்டங்கள் ஏற்படுத்தப்பட்டன. எனினும் எமானுபல் நோபலும் அவரது புத்திரர்களும் தம் ஆராய்ச்சியைக் கைநழுவ விடவில்லை. நாட்டில் ஆராய்ச்சி செய்யக்கூடாதென்று சட்டம் தடைசெய்துவிட்டதினுல், அவர்கள் ஒரு பெரிய படகை வாடகைக்கு அமர்த்தி ஸ்டாக்கோம் நகருக்கு அருகிலுள்ள மலாரன் ஏரி மத்தியில் சென்று தங்கி ஆராய்ச்சிகள் நடத்தினர்.

### ஆல்ப்ரட் நோபல் வரலாறு.

### இவர் 1833-ல் பிறந்தார்.

அவர் பள்ளியில் வெகு காலம் கல்வி கற்கவில்லை. எனினும் தந்தையாரோடு நெருங்கிப் பழகியதினுலும், ஜாஸ்தியாக தேச சஞ்சாரம் செய்ததினுலும், கணக்கற்ற புஸ்தகங்களை சுயமாக வாசித்து அநேக பாஷைகளைக் கற்றுக்கொண்டார். அமெரிக்காவில் இயந்திர நிர்மாணத்தில் அக்காலத்தில் பிரக்யாதி பெற்றிருந்த காப்டன் ஜான் எக்ரிசனைப் பார்த்து வரும்படி எமானுலன் நோபல், தமது ஆல்ப்ரட் நோபலை, பதினேழாவது வயதில் நியூயார்க்கு நகரத்துக்கு அனுப்பினுர். ஆல்ப்ரட் நோபல் காப்டன் ஜான் எக்ரிசனிடம் சில காலம் தங்கி யிருந்து பல விஷயங்களைக் கிரகித்துக்கொண்டார்.

### ருஷிய துரைத்தன சேவை.

நூதன யந்திர நிர்மாணத்தில் ஆல்ப்ரட் நோபல் மிகத் திறமையுடைவரா யிருந்தாராயினும் அவரது தந்தையாரின் வெடிகுண்டு ஆராய்ச்சியை

இடை முறியாது தொடர்ந்து நடத்திக்கொண் டிருந்ததினாலேயே அவரது பேரும், புகழும், செல்வமும் உண்டாயிற்று. நைட்ரோகிளசரியின் திராவகத்தை வேறு பல பொருள்களோடு கலந்து ஆராய்ச்சி செய்து, 1863-ல் டைனமைட்டு என்னும் சுரங்கக் கருவியைக் கண்டுபிடித்தார். செயின்டு கோட்டார்டு சுரங்கம் வெட்டுவதற்கு முதன் முதலாக இந்த டைனமைட்டு உபயோகப்படுத்தப்பட்டது. பல ஆண்டுகள் பிடிக்குமென்று எதிர்பார்க்கப் பட்டிருந்த அந்த சுரங்க வேலை "டைனமைட்டு" உபயோகத்ததினால் சில மாதங்களில் முடிவு பெற்றதுமன்றி செலவிலும் 50-லட்சம் டாலர் லாபமுண்டாயிற்று. இந்த டைனமைட்டினால் உலகத்துக்குண்டான இலாபத்தை அளவிட்டுக் கூறமுடியாது. தண்ணீருக்கு அடியிலுள்ள பாறைகளை சுரங்கம் வைப்பதற்காக, இந்த டைனமைட்டுக்கு ஒரு உளவு கண்டு பிடித்தார். பின்னர் புகையில்லா வெடி மருந்து கண்டுபிடித்தார். அவர் இவ்வண்ணம் கண்டு பிடித்த போர்க் கருவிகள் அநந்தம். அவர் கண்டுபிடித்த 85 கருவிகளுக்கு அவர் பேடண்டு உரிமை பெற்றிருந்தார். அந்த 85 கருவிகள் மூலம் அவருக்குக் கிடைத்த ராயல்ட்டி வருமானமே அவரது திரண்ட செல்வத்துக்குக் காரணம். அம்மட்டோ? அவரது சகோதரர்களான ராபர்ட்டு நோபலும் லட்சாக் நோபலும், ருஷிய சர்க்கார் உதவிபெற்று, பாக்கு என்ற வனப் பிரதேசத்தில் எண்ணெய்க் கிணறு கண்டுபிடிக்க வேலை செய்து கொண்டிருந்தனர். அந்தத் தொழிலிலும் நமது நோபல் ஏராளமான பணம் முடக்கி யிருந்தார். கடைசியில் எண்ணெய்க் கிணறு வேலை விஜயமாக முடியவே, அது மூலமும் நமது நோபலுக்கு மட்டற்ற வருமானம் வந்தது. மண்ணெண்ணெய் சுத்தம் செய்யவும் ஏற்றுமதி செய்யவும் விஞ்ஞான சாஸ்திர நிபுணர்களான நமது நோபல் சகோதரர்கள் பல நூதன முறைகளைக் கண்டு பிடித்துக் கையாண்டதினால், எண்ணெய்த் தொழிலால் அவர்களுக்கு அநேகமான இலாப முண்டாயிற்று. மகா யுத்தத்துக்குமுன், ருஷிய சர்க்காரின் மொத்த வருமானத்தில் ஆறில் ஒரு பகுதி, நோபல் சகோதரரின் முயற்சியினால் உண்டான கைத் தொழில்கள் மூலம் கிடைத்து வந்ததென்றால் அவர்களது செல்வம் எவ்வளவு பெருந் தொகையானதா யிருக்கவேண்டுமென்று வாசகர்களே ஊகித்துக் கொள்ளலாம். போல்ஷவிக் அரசாங்கம் ருஷியாவில் தோன்றியது முதல் நோபல் சகோதரர்கள் தொழிற்சாலைகளெல்லாம் சர்க்காருக்குப் பறி முதலாயின.

## பாரிஸ் நகரவாசம்

1873-முதல் ஆல்ப்ரட் நோபல் பாரிஸ் நகரத்தில் வசிக்கத் தொடங்கினார். அவர் வசித்தமாளிகை மிக அழகான ஒருகட்டிடம். அவர் விவாகம்செய்து கொள்ளவில்லையாகையால் சில பணியாட்களோடு தனிமையாகவே வாழ்ந்து வந்தார். தனக்கு உதவியாக ஒரு அந்தரங்க காரியதரிசியைக்கூட அவர் வைத்துக் கொள்ளவில்லை. எல்லா வேலைகளையும் தானாகவே கவனித்து வந்

தார். அவரது நிலைமையிலுள்ள அக்காலத்துப் பெரியார்கள் ஒன்றிரண்டு காரியதரிசிகளையும் பல குமஸ்தாக்களையும் அமர்த்திக் கொள்வது சர்வ சாதாரண வழக்கமாக இருந்து வந்தது. ஆடம்பர வாழ்க்கையில் வெறுப்பும் எளிய தனி வாழ்க்கையில் விருப்பும் உடைய நமது நோபல் அத்தகைய தர்பார் என்றும் வைத்துக் கொள்ளவில்லை.

ஷெல்லி என்ற ஆங்கிலக் கவியின் நூல்களை யெல்லாம் அவர் மனப் பாடம் பண்ணியிருந்தார். எனவே அரசியல் விஷயங்களில் அவர் மிக சுதந்தர அபிப்பிராயமுடையவரா யிருந்தார். குடி அரசுக் கொள்கையிலே அவருக்கு மிகுந்த பற்று இருந்துவந்தது. சமயச்சார்பாகப் பார்த்தால் அவர் நீரீசுரவாதி யென்றே சொல்லவேண்டும். அவரது அந்தரங்கக் கடிதங்களெல்லாம் மேலே கூறிய நமது அபிப்பிராயங்களையே வற்புறுத்துகின்றன.

இளமைப் பருவத்தில் அவர் ஆங்கிலத்தில் பல கவிகள் எழுதினாராம். பிற்காலத்தில் அவர் அவைகளைக் கொளுத்தி விட்டாராம். ஸ்வீடன் பாஷை யில் அவர் ஒரு நாவல் எழுதி வெளியிட்டனராயினும், அதினால் அவருக்குப் புகழுண்டாகவில்லை. இறப்பதற்குச் சில காலத்துக்கு முன் நாடகங்கள் எழு தவும் அவர் முயற்சி செய்தார். அவரது கடிதங்களெல்லாம் இலக்கியச் சுவை மிகுந்து விளங்குகின்றன.

அநீதச் செயல்களில் அவருக்கு மிகுந்த வெறுப்பு. வக்கீல்களைப்பற்றி யும் அவருக்கு நல்ல அபிப்பிராய மில்லை. அவர் வாழ்நாள் முழுதும் ஒரு பொழுதேனும் அவர் வக்கீலின் உதவியை நாடியதில்லை. தனக்கு வேண்டிய தஸ்தாவேஜிகளை யெல்லாம் தானாகவே எழுதிக் கொடுத்தார். கடைசியாக அவர் எழுதிய மரண சாசனமும் (Will) அவராகவே எழுதி முடித்தார். அதில் சட்ட சம்பந்தமான பல குறைகள் இருந்தன. அவரது வாரீசுகள் வழக்குத் தொடர்ந்திருந்தால் அந்த உவில் செல்லாது போயிருக்கும். ஆனால் வாரீசு கள் வழக்குத் தொடரவில்லை. அவர்களெல்லாம் சேர்ந்து அந்த ‘உவிலை’ ஊர்ஜிதம் செய்தார்கள்.

## வள்ளன்மை

அவர் வரையாது கொடுக்கும் வள்ளல். பாதிரிமாரிடம் அவருக்கு பற் றும் நம்பிக்கையும் இல்லையாயினும் எத்தனையோ கோயில்கள் கட்ட அவர் பொருள் உதவி செய்தார். கிறிஸ்து மதக் கொள்கைகள் எல்லாம் அவ ருக்கு உடன்பாடுதான். கிறிஸ்தவ ஆசார அனுஷ்டானங்களைத் தான் அவர் அறவே வெறுத்தார். ஜீவர்களிடத்து அன்பே அவர் கைக் கொண் டொழுகிய மதம். அன்பும் அருளும் அவரது மதமும் கடவுளும் என்னலாம்.

பாரிசில் இருக்கும் பொழுது அவர் உளவு அறிய முயன்றதாக பிரஞ்சு சர்க்கார் சந்தேகம் கொண்டதினால் அவர் வெறுப்புற்று அவ்விடமிருந்து சென்று இத்தாலியாவிலுள்ள சான் ரேமியோ நகரம் சென்றார். 1896ஆ டிசம்பர்மீ 10உ அவர் அங்கே மரணமடைந்தார்.

## நோபல் பரிசு

1895 நவம்பர் 27-உ அவர் உவில் எழுதினர்.

அந்த 'உவில்' படி குடும்பத்தாருக்கு விட்டுக் கொடுத்தது போக மீதமுள்ள ஸ்தாவர சொத்துக்களெல்லாம் ஒரு பஞ்சாயத்தாரிடம் ஒப்ப டைக்கப்பட்டன. அந்தச் சொத்துக்களின் வருஷ வருமானத்திலிருந்து ஒரு பகுதியை (1) பிரகிருதி சாஸ்திர சம்பந்தமாக ஏதாவது நூதனமாகக் கண்டுபிடிக்கிறவர்களுக்கும் ஒரு பகுதியை (2) இரசாயன சாஸ்திர விஷய மாக நூதன ஆராய்ச்சி செய்கிறவர்களுக்கும் ஒரு பகுதியை (3) வைத்திய சாஸ்திர விஷயமாக நூதனமாக ஏதாவது கண்டு பிடிக்கிறவர்களுக்கும் ஒரு பகுதியை (4) இலக்கியச் சார்பாக உயர்வித நூல் எழுதுகிறவர்களுக்கும் ஒரு பகுதியை (5) உலகத்தில் சமாதானம் நிலை பெற ஏதாவது நூதன முயற்சி செய்கிறவர்களுக்கும் பரிசாக வழங்கவேண்டுமென்று ஏற்பாடு செய்துவைத் தார். இது தான் நோபல் பரிசின் வரலாறு. ஒவ்வொரு வருஷமும் டிசம் பர் மாதம் 10-உ (நோபல் இறந்த தினம்) ஸ்டாக்கோம் நகரத்தில் இந்தப் பரிசு பஞ்சாயத்தாரால் கொடுக்கப்படுகிறது. பரிசுக்கு உடையவரை நிர்ணயம் செய்ய ஒரு பஞ்சாயத்தும் ஏற்படுத்தப் பட்டிருக்கிறது.

அந்தந்த வருஷத்துக்குத் தக்கபடி பரிசு வழங்கப்படும். மிகக் குறைந்த வருமானம் கிடைத்த 1923-ல் ஒவ்வொரு பரிசுக்கும் 30,802 டாலர் வழங் கப்பட்டது. சென்ற வருஷம் ஏராளமாக வருமானம் கிடைத்ததினால் 42,060 டாலர் வழங்கப்பட்டது.

ஆல்ப்ரட் நோபலைப் போன்ற விசாலச் சிந்தனையுடைய பிரபுக்கள் தமிழ் நாட்டில் தோன்றுவார்களா?



# ஆரியசித்தாந்தம்.

## உலக ஞானம்.

(460-ம் பக்கத் தொடர்ச்சி.)

(சிவானந்தசாகர யோகீஸ்வரர்)

பந்துக்கள் ஒருவரை ஒருவர் நேசிக்கவேண்டும். ஒரு போதும் சண்டை போட்டுக்கொள்ளக் கூடாது. அரசனே இதுவே உறவினர் செய்யத் தக்க செய்கையாம். தன் சொந்த நன்மையை விரும்புகிற எவனும் தன் பந்துக்களுடன் பகை வைக்கக்கூடாது. உலகத்தில பந்துக்களா யிருக்கிறவர்கள் ஒருவரை இம்சிக்கிறார்கள். ஒருவரைத் துக்கத்தில் முழுகுவிக்கிறார்கள். தர்மாத்மாவா யுள்ளவனே யிரக்ஷிக்கிறான். அதர்மி கெடுக்கிறான். வேடனைக் கண்டு பயப்படுகிறதைப் போல எந்தப் பந்துவைக் கண்டு ஒருவன் பயப்படுகிறானோ அந்தத் தனவந்தனை பந்து பயப்படுகிறவனுடைய பாவங்களை யெல்லாம் வாங்கிக் கொள்கிறான். பெரியோர்களால் கூறப்பட்டிருக்கிற இந்த வசனங்களை நன்றாய் யோசித்துக் காரியத்தைச் செய்யத் தொடங்குகிறவனுக்கு எப்போதும் கீர்த்தியே உண்டாகும். நன்றாய்ப் படித்துத் தெரிந்துகொண்டிருக்கிறவர்களிடத்திற் கூட இந்த ஞானம் குறைவு படுகிறது. இந்த ஞானமிருந்தாலும் அதை அனுபவத்துக்குக் கொண்டு வருவது அரிது. பாவமானதும் துக்கம் தருவதுமான கார்யத்தை அறிவுள்ளவன் செய்யக்கூடாது. அவன் செல்வம் எப்போதும் விருத்தியாகின்றது. பூர்வ ஜன்மத்தில் நடந்த பாப மார்க்கத்தையே மூடத்தனத்தினால் பற்றி நடக்கிறவன் ஈனனுமாவான். அவன் ஆழான சேற்றில் மூழ்குகிறவனுமாவான். இந்த ஆறையும் புத்திமான் கைக்கொள்ள வேண்டும். தன் வம்சம் நெடுங்காலம் விளங்க வேண்டுமென்று விரும்புகிறவன் பின் வரும் ஆறையும் விலக்கவேண்டும். அவை மதம், மனோராஜ்யம் செய்தல், பொறாமை, தூதர்களை அனுப்பும் விஷயத்தில் உபேக்ஷையா யிருப்பது, தன் ஒருவனுக்காகவே யோசித்தல், தூர்த்தர்களிடத்தில் நம்பிக்கை வைப்பது என்பனவாம். இந்த ஆறும் அனர்த்தத்திற்கு வாயில்களாக இருப்பதனால் அவசியம் இவைகளை விலக்கவேண்டும். இவைகளைச் சரியாய் அனுஷ்டிக்கிறவன் தன் பகைவருடைய சிரசில் விளங்குவான். வேதத்தில் பழக்கமில்லாமலும், பெரியோர்களை அடுக்காமலு மிருக்கிறவன் பிருகஸ்பதிக்குச் சமமான அறிவுள்ளவனா யிருந்தாலும் அவன் அர்த்த காமங்களை அடையமாட்டான். அவைகளை அறியவுமாட்டான்.

சமுத்திரத்தில் எறிந்த பொருள் இழக்கப்பட்டதேயாம். தன்னடக்கமில்லாதவனுக்கு வேதம் பயன் தராது. கேளாதவனுக்குச் சொல்வதும் பயன்படாது. சாம்பலில் ஓமம் செய்த நெய் பயன்படுவதில்லை. அறிவுள்ளவன் அறிவுள்ளவனிடத்திலேயே சிநேகிதம் செய்வான். தன் அறிவினாலும், யோசனையாலும் முதலில் பரிட்சித்தே சிநேகிதம் செய்வான். கண்ணாலும் காதாலும் பரிட்சியாமல் சிநேகிதம் செய்யமாட்டான். வணக்கமானது

இழிவுரைகளை அழிக்கும். சாமர்த்தியம் தவறுதலை அழிக்கும். பொறுமை எப்போதும் கோபத்தை ஜயிக்கும். நல்ல செய்கை துன்மார்க்கத்தை நாசம் பண்ணும். ஒருவனுடைய உயர் பிறப்பை அவனது போகானுபவம், பிறப்பிடம், குடும்பம், நடக்கை, ஆகாரம், உடை, இவைகளால் பரிட்சித்து அறியவேண்டும். அனுபவிக்கத்தக்க பொருள் கிடைத்தால் அவன் சிறையிலிருந்தாலும் அதை அனுபவிக்கத் தவறமாட்டான்; என்றதனால் அவன் சகல மங்கள காலங்களிலும் அதை அனுபவிப்பான் என்பது விளங்கும். அறிவுள்ளவர்களுக்கு அடங்கியிருக்கிறவனும், படித்தவனும், தர்ம முள்ளவனும், சரியான தோற்றமுள்ளவனும், நல்ல சிநேகித முள்ளவனும், இனிமையாகப் பேசுகிறவனும், நல்ல இருதயமுள்ளவனுமான மனிதனையே மந்திரியாக அரசன் நியமிக்க வேண்டும். தாழ்ந்த வம்சத்தில் பிறந்தவனானாலும் மரியாதையும், வணக்கமுள்ளவனும், லஜ்ஜையுள்ளவனுமா யிருக்கிறவன் உயர் குலத்தில் பிறந்த நூறு பேர்களைவிட மேலானவன். மனம், இரகசியம் காத்தல், இன்பம், செல்வம் இவைகளில் ஒத்திருக்கிறவருடைய சிநேகிதம் ஒரு போதும் விடுபடுகிறதில்லை. புல்லால் மூடப்பட்டிருக்கிற கிணறு போன்ற வாயை யுடையவர் துஷ்டர்களிடத்தில் ஒருபோதும் சிநேகிதம் செய்யக்கூடாது. அவர்களுடைய சிநேகிதம் நிலை நில்லாது. அறிவுள்ளவன் கர்வமுள்ளவர்கள், அறிவில்லாதவர்கள், கொடுமை யுள்ளவர்கள், மூரட்டுத்தன முள்ளவர்கள், தர்மங்கடந்தவர்கள் இவர்களுடன் சிநேகிதம் செய்யக்கூடாது. நன்றி, தர்மம், பக்தி, புலனடக்கம், தன் அந்தஸ்தைக் காப்பாற்றுதல், சிநேகிதர்களை விடாமை ஆகிய இவைகளை யுடையவனிடத்தில் சிநேகம் செய்யவேண்டும். புலன்களை விஷயங்களினின்றும் மீட்பது மரணம் போன்ற கஷ்டத்தைத் தரும். இந்திரிய விஷயங்களை அதிகமாகப் பாராட்டுவது தேவர்களைக் கூட அழிக்கும். எல்லாப் பிராணிகளிடத்திலும் பிரியமாயிருப்பது, வணக்கம், பொறுமை, சிநேகிதர்களிடத்தில் மரியாதையாயிருத்தல் இவைகள் நீண்ட ஆயுளைக் கொடுக்குமென்று அறிஞர்கள் சொல்கிறார்கள். விடப்பட்ட தர்மங்களை மறுபடியும் உறுதியாக அனுஷ்டிக்கிறவனை ஆண்மையுள்ளவனென்று கூறுகிறார்கள். இனிமேல் வரும் இடையூறுகளைத் தடுக்கத் தெரிந்தவனும், நிகழ் காலத்தில் உறுதியான காரிய நிச்சயத்தை யுடையவனும், தொடங்குவதற்கு முன்னமே இப்படிச் செய்தால் இது இப்படியாகுமென்று அறிகிறவனும் தன் மனோரதங்களையெல்லாம் நிறைவேற்றிக் கொள்கிறான். வாக்காலும் செய்கையாலும், எண்ணத்தினாலும் எது அதிகமாகப் படுகிறதோ அது மனிதனைத் தன் வசப்படுத்திக் கொள்கிறது. ஆகையால் மனிதன் தனக்கு நன்மையான விஷயங்களிலேயே பழகவேண்டும். எது நன்மையானது என்பதையும், கால தேசங்களின் நன்மையையும், காரியம் செய்யும் மார்க்கத்தையும், வேத உணர்ச்சி, சுறுசுறுப்பு, முயற்சி, அடிக்கடி நல்லவர்களுடன் பழகுதல் இவைகளையும் அறிந்து செய்வதனால் நல்ல வாழ்வுண்டாகும். விடா முயற்சியே, இலாபம் வாழ்வு பலன் இவைகளுக்கு மூலம். தன் எண்ணத்தை விடா முயற்சியுடனும் இடையூறினால் விட்டு விடாமலும் செய்கிறவன் பெரியதும் முடிவற்றதுமான வாழ்வை யடைவான்.

பொறுமையே மனிதனுக்குத் தேஜஸையும் சுகத்தையும் எக்காலத்திலும் கொடுப்பதாம். அதைத்தவிர வேறொன்றுமில்லை. பலவீனன் எல்லா விஷயங்களிலும் பொறுமையாக இருக்கவேண்டும். சக்தி யுள்ளவன் தர்

மத்தை உத்தேசித்துப் பொறுமையா யிருக்கவேண்டும். காரியங்களிலும் ஜயாபஜயங்களிலும் சமான புத்தியுள்ளவனே பொறுமையுள்ளவனு யிருக்கிறான். தன்னுடைய தர்மார்த்தங்களுக்கு விரோதமில்லாம லிருக்கிற இன்பமே திருப்தியாய் அனுபவிக்கத் தக்கதாம். புலன்களை இஷ்டப்படி செல்ல விட்டு மூடனைப்போல நடந்துகொள்ளக்கூடாது. துக்கத்தால் துன்ப மடைந்து வருந்துகிறவன், துன்மார்க்கத்தில் பழகுகிறவன், சோம்பேறி, புலனடக்க மில்லாதவன், முயற்சியை விட்டவன் இவர்களிடத்தில் வாழ்வு நிலைத்திருப்பதில்லை. மரியாதையும், வணக்கமும் அடக்கமுமுள்ளவனை துன்மார்க்கர்கள் சக்தியில்லாதவனென்று நினைத்து வருவார்கள்.

மிதமிஞ்சின தானம், அளவில்லாமல் கொடுப்பது, அபூர்வமான வீரம், உக்கிரமான நோன்பு, தன் ஞானத்தால் கர்வித்தல் இவைகளை யுடையவனை வாழ்வு நெருங்க அஞ்சும். அதிகமான காரியசித்தி யுள்ளவன், காரியசித்தி யில்லாதவன் இவர்களிடத்தில் வாழ்வு நிலைத்திருப்பதில்லை. சகல தர்மங்களாலும் நிறைந்தவனையும், தர்மமே யில்லாதவனையும் வாழ்வு அடைவதில்லை. செல்வமானது குருட்டுத் தனமாய்ப் பெருமையற்றவனிடத்தில் வசிக்கிறது. வேதத்துக்குப் பயன் அக்கினியால் ஓமம் செய்வது. வேதப் பயிற்சிக்கு நற்குண நற்செய்கைகளை யடைவது பயன். பெண்களாலாகும் பயன் இன்பம், சந்ததிவிருத்தி. செல்வத்தாலாகும் பயன் போகானுபவம் தானம். பாபத்தால் சேர்ந்திருக்கிற செல்வத்தினுல் பரலோகத்துக்குரிய தர்மத்தைச் செய்கிறவன் மறுமையில் அதன் பயனை அடைவதில்லை. ஏனெனில் பாபத்தால் தேடின அப்பொருள் மறுமை இன்பத்தைக் கொடாது. மனேபல முடையவன் வனத்திலும், துர்க்கத்திலும், பலவகை அபாயங்களிலும், பயகாலத்திலும், தன்னைக் கொல்வதற்காகத் தூக்கப்படுகிற ஆயுதங்களைப் பார்ப்பதிலும் ஒரு போதும் பயப்படுகிறதில்லை.

முயற்சி, அடக்கம், சாமர்த்தியம், ஜாக்கிரதை, உறுதி, ஞாபகம் முதிர்ந்த யோசனை இவைகள் ஐசுவரியத்துக்குக் காரணங்களாகின்றன. பொறுமையே தவத்துக்கு வலிமை கொடுப்பது. வேத முணர்ந்தவர்களுக்கு வேதமே பலம். துஷ்டர்களுக்குப் பலம் பகைமையில். தார்மிகர்களுக்குப் பலம் பொறுமையில். ஜலம், கிழங்கு, கனி, பால், நெய், பிராமணர்கள் இஷ்டப்படி செய்வது, குருவின் கட்டளைப்படி செய்தல், ஔஷதம், இந்த எட்டும் விரதங்களை அழிப்பதில்லை. தனக்கு விரோதமாயிருக்கிறதைப் பிறரிடத்தில் உபயோகிக்கக் கூடாது. சுருக்கமான தர்மம் இதுவே. அநேக விதமான தர்மங்களிருந்தாலும் அவைகள் எண்ணத்திலிருந்து தோன்றுகின்றன. பொறுமையாலே கோபத்தை ஜயிக்கவேண்டும். துஷ்டர்களை யோக்கியத்தால் ஜயிக்க வேண்டும். உலோபியைக் கொடையால் ஜயிக்க வேண்டும். அசத்தியத்தைச் சத்தியத்தால் ஜயிக்கவேண்டும். ஸ்திரீகள், சோரன், சோம்பேறி, அச்சமுள்ளவன், கொடியவன், தன் சக்தியைத் தானே மெச்சிக் கொள்கிறவன் இவர்களிடத்தில் நம்பிக்கை வைக்கக் கூடாது. திருடன், நாஸ்திகன், நன்றியில்லாதவன் இவர்களையும் நம்பக் கூடாது. ஆண்மை, ஆயுசு, புகழ், வல்லமை இந்த நாலும் பெரியோரை வணங்குவதாலும், சேவிப்பதாலுமே விருத்தியாகின்றன. மஹா கஷ்டமான முயற்சியால் சம்பாதிக்கப் படுகிறதும், தர்மத்தை யிழப்பதினுல் சம்பாதிக்கப் படுகிறதும், சத்துருக்களை வணங்குவதால் சம்பாதிக்கப்படுகிறதுமான பொருளை இச்சிக்கக்கூடாது. அறிவில்லாதவளைப்பற்றித் துக்கிக்க வேண்

டும். பலன் கொடாத காரியத்தைப் பற்றித் துக்கிக்கவேண்டும். அரச னில்லாத நாட்டைப்பற்றித் துக்கிக்கவேண்டும். பலமில்லா சரீரமுடைய வர்களுக்கு நடக்கிற வழியானது துன்பந்தரும். மழையானது மலைகளுக் குத் துன்பமாகும். பெண்களுக்கு நாயகனில்லாம விருப்பது துன்பமாகும். கொடுஞ்சொல் மனதுக்குத் துன்பந்தரும். பழக்கமில்லாமலிருக்கிறது வேதத் துக்குக் குறைவு. நோன்பில்லாம விருப்பது பிராமணர்களுக்குக் குறைவு. பூமிக்கு வால்ஹிகளிருப்பது குறைவு. விநோதங்களைக் காண்பது கற்புடைய பெண்களுக்குக் குறைவு. மற்றைய ஸ்திரீகளுக்கு வீட்டைவிட்டு வெளியில் போயிருப்பது குறைவு. தங்கத்துக்கு வெள்ளி அழுக்கு, வெள்ளிக்கு இரும்பு அழுக்கு, இரும்புக்கு ஈயம் அழுக்கு, ஈயத்துக்கு வண்டல் படிதல் அழுக்கு. ஒருவனும் படுத்துக்கொண்டு நித்திரையை ஜயிக்கமாட்டான். ஸ்திரீகளை விருப்பத்தினால் ஜயிக்க முடியாது. சிநேகிதர்களைத் தானத்தினாலும், சத் துருக்களை யுத்தத்தினாலும், அன்னபானாதிகளால் மனைவியையும் அடக்கிக் கொள்கிறவன் காரியசித்தி பெற்றுச் சுகமாய் வாழ்வான். ஏதாவதொரு கார ணத்தால் ஜீவியாதவன் ஒருவனுமில்லை. நெல், கோதுமை, தங்கம், பசுக் கள், ஸ்திரீகள் இவைகளால் திருப்தியடைகிறவன் ஒருவனுமில்லை. இவை களை யோசித்துப்பார்த்து இராஜ்யம் முழுமையும் தனக்கு வேண்டுமென்று ஒருவனும் துக்கிக்கமாட்டான்.

நல்லவர்களால் மரியாதை செய்யப்பட்டுக் கர்வத்தை ஒழித்துத் தன் சக்திக்குத் தக்கபடி முயற்சிக்கிறவன் சீக்கிரத்தில் கீர்த்திபெறுவான். நல்ல வர்கள் ஒருவனிடத்தில் மகிழ்ச்சியா யிருந்தால் அவர்கள் சுகத்தையே தேடிச் செய்வார்கள். நீதியற்ற தன் எண்ணம் பெரிதாயிருந்தாலும் அதை விட்டு விடுகிறவன் சட்டை யுரித்த பாம்பைப்போலப் பகைவர்களைத் தொலைத்து விட்டுச் சுகத்தை அனுபவிப்பான், அசத்தியத்தால் பெற்ற ஜயம், அரச னிடத்தில் வஞ்சனையாக நடத்தல், குருவினிடத்தில் வஞ்சனையாகப் பேசு தல் இந்த மூன்றும் பிரமஹத்திக்குச் சமானமான தோஷமுடையவைகள். அதிக பகை, மரணம், தற்புகழ்ச்சி இம்மூன்றும் ஐசுவரியத்தை அழிக்கும் கருவிகளாம். குருவைச் சேவிப்பதில் அஜாக்கிரதையா யிருத்தல், அவசரம், தற்புகழ்ச்சி யிவை மூன்றும் அறிவின் சத்துருக்கள். சோம்பல், கவனியாமை, புத்தி மயக்கம், சாந்தியின்மை, கூட்டம் கூடி வீண் பேச்சு பேசுதல், கொடுமை, பேராசை இந்த ஏழும் கல்வி கற்கிற மாணக்கர்களுக்குக் குற்றங் களாம். (தொடரும்)

## மனிதன் வயது பத்துப் பத்தாய்

| | | | | |
|---|---|---|---|---|
| பத்தில் | பால்யம் | இது | அறுபதில் | ஆட்டம் |
| இருபதில் | இளமை | சரி | எழுபதில் | ஏக்கம் |
| முப்பதில் | முருக்கு | தானா | எண்பதில் | வீக்கம் |
| நாற்பதில் | நழுவல் | ? | தொண்ணூறில் | தூக்கம் |
| ஐம்பதில் | அசதி | | நூறில் | மரணம் |

# வானசாஸ்திரி—கலீலியோ.

(ஆசிரியர், A. சுருளியாண்டி கௌட)

இத்தாலியா தேசத்திலுள்ள பைஸா (Pisa) என்னும் நகரில் 1564-ம் ஆண்டு பிப்ரவரித் திங்கள் 18-ம் தேதியன்று வின்ஸென்ஸோ (Vincenzo Galilei) கலீலியை என்பாரின் புதல்வராய்க் கலீலியோ என்பவர் பிறந்தார். கலீலியோவின் தந்தையார் உயர்குடிப் பிறந்தவ ரெனினும் அத்தனை தனவந்தரல்லர். ஆயின், விஷயங்களின் உண்மையை உணரவேண்டுமென்னும் அவா மிகுதியும் உடையவர். இவரைப் போன்றே இவரது புத்திரரான கலீலியோவும் சிறு பிராயத்திலேயே உண்மை உணர்தலில் மிகுந்த விருப்ப முடையவரா யிருந்தது ஆச்சர்ய மன்று.

கலீலியோவை அவரது தந்தையார் முதன் முதல் தம் ஊரிலுள்ள பள்ளிக் கனுப்பினர். சிறிதளவு கற்றவுடன் இவரைக் கம்பள வியாபாரத்தில் புகுத்தவேண்டு மென்பதே இவரது தந்தையின் நோக்கம். கலீலியோ அப் பள்ளியில் டாண்டி (Dante), டாஸோ (Tasso), அரியாஸ்டோ (Ariosto) போன்ற சிறந்த கவிஞர்களின் நூல்களைக் கசடறக் கற்றறிந்தார். ஓவியம் வரைவதிலும், வீணை வாசிப்பதிலும் பழகி வந்தார். இவரது கல்வித் திறனைக் கண்ட தந்தையார் "இவருக்குக் கம்பள வியாபாரம் தகுதியன்று; கலாசாலைக் கல்வியே தக்கது," எனத் தீர்மானித்து பைஸா சர்வ கலாசாலைக்கு வைத்திய சாஸ்திரம் கற்குமாறு இவரை யனுப்பினர். அக்காலத்தில் கணித, தத்துவ சாஸ்திரிகளுக்குத் தக்க வருமானம் கிட்டுவதில்லை. ஆனது பற்றியே இவர் வைத்திய சாஸ்திரம் கற்கவேண்டு மென்பது தந்தையாரின் சிந்தனை.

கலீலியோ ஓர்நாள் அவ்வூர் ஆலயத்தில் ஜபம் செய்துகொண்டிருக்கும் சமயம், அவ் வாலயத்தில் ஒரு பெரிய விளக்கு ஆடிக் கொண்டிருந்தது. அது ஆடும் காலத்தை இவர் தன் நாடி அடிப்பதைக் கொண்டு கணக்கிட்டார். உடனே, அவ்வாறு ஆடிக் கொண்டிருக்கும் ஓர் வஸ்து ஓரிடத்தினின்று மற்றோரிடத்திற்குச் செல்வதற்கு எப்பொழுதும், எவ்வளவு தூரமாயினும் ஒரே காலந்தான் ஆகிறது எனத் தீர்மானித்தார். இத் தீர்மானத்தின் உதவியைக் கொண்டே தற்போது காலங் காட்டும் கருவிகளாகிய கடியாரங்கள் செய்யப் பெறுகின்றன. இது நிற்க, ரிஸ்ஸி (Ricci) என்னுங் கணித சாஸ்திரி யொருவர் பைஸா நகருக்கு வரவும், அவருடன் கலீலியோ கணிதம் கற்கத் தொடங்கினர். தனது இருபத்தாறும் வயதிற்குள் அக் காலத்தவர் அறிந்திருந்த கணித, தத்துவ, இயற்கை சாஸ்திரங்க ளனைத்தையும் நன்கறிந்து கொண்டார். அதே காலத்தில் நாளொன்றுக்கு $7\frac{1}{2}$ அணு சம்பளமுள்ள ஓர் கணித போதகராக பைஸா சர்வகலாசாலையில் நியமிக்கபபெற்றார்.

கலாசாலையிலுள்ள காலத்தில், கனமா யிருப்பினும், லேசா யிருப்பினும் எந்த வஸ்துவும் ஒரே உயரத்தினின்றும் பூமியில் விழுவதற்கு ஒரே காலந்தான் ஆகிறது என்ற உண்மையைக் கண்டு பிடித்தார்; ஆயின், இது அக்காலத்தில், அந்நாட்டினர் கொண்டிருந்த கொள்கைகளுக்கு மிகவும் மாறுபட்டது. எவ்வாறெனின், கிரேக்க தத்துவ சாஸ்திரியான அரிஸ்டாடில் (Aristotle) என்பவர் சிலவற்றைப்பற்றி எழுதியிருந்தார்.

அவர் எழுதியுள்ளதே உண்மை யென்றும், அதைத் தவிர வேறு எதுவும் உண்மையல்ல என்பதுமே அக்காலத்தவர் கொள்கை. அரிஸ்டாடில் தமது நூலில் "ஒரே உயரத்தி னின்றும் பூமியில் விழுவதற்கு லேசான வஸ்துவைக் காட்டினும், கனபதார்த்தங்களுக்குக் குறைந்த காலம் செல்கிறது." எனக் குறிப்பிட்டுள்ளார். அவர் ஏன் அவ்வாறு எழுதி வைத்தார் என்பது ஒருவருக்கும் தெரியாவிடினும், கலீலியோ கூறுவதை மட்டும் ஒருவரும் நம்பவில்லை. கலீலியோ ஓர் நாள் பைஸா நகரிலுள்ள சாய்ந்த கோபுரத்தின் (Leaning Tower) மீதேறி அங்கிருந்து 100 பவுன் எடை ஒன்றையும், 1 பவுன் எடை ஒன்றையும் ஏககாலத்தில் நேராகக் கீழே எறிந்தார். அவை இரண்டும் ஒரே காலத்தில் அங்குள்ளோர் முன்னிலையில் நிலத்தில் வீழ்ந்தன. எனினும், அங்கிருந்தோர் நேரிற் கண்டுங்கூட நம்பாது கலீலியோவை வெறுக்க ஆரம்பித்தனர். ஜனங்களின் வெறுப்பைப் பெற்ற கலீலியோ 1592-ம் ஆண்டு பைஸா நகரை நீங்கி, வெனிஸ் (Venice) நாட்டிலுள்ள பாதுவா (Padua) ஸர்வ கலாசாலையில் ஓர் வேலையை ஒப்புக் கொண்டு அங்கு சென்றார்.

அதே காலத்தில் மிடில்ஸ்பரோ (Middlesburgh) பட்டணத்தில் கண்ணாடிக் கடையில் வேலை கற்றுக்கொள்ளும் ஒருவனால், மூக்குக் கண்ணாடிக்கு உபயோகமாகும் வட்டமான இரண்டு கண்ணாடிகளை ஒரு விதமாகச் சேர்த்துச் செய்யப் பெற்றதும், தூரத்திலுள்ள வஸ்துவைச் சமீபத்திலும், தலை கீழாயும் காட்டக்கூடிய சக்தியுள்ளதுமான விநோதக் கருவியொன்று செய்யப் பெற்றது. இந்தச் சங்கதி எவ்வாறோ கலீலியோவிற்குத் தெரிந்தது. இவர் அதைப்பற்றி ஆழ்ந்து யோசனைசெய்து, ஓர் குழாயை எடுத்து அதன் ஓர் முனையில் நடுவில் பள்ளமாயுள்ள ஒரு வட்டக் கண்ணாடியையும், மற்றோர் முனையில் நடுவில் மேடாயுள்ள ஓர் கண்ணாடியையும் பதித்து, அதன் மூலமாய் தூரத்திலுள்ள வஸ்துக்களை நோக்கினவுடன், அவைகள் அருகாமையிலும், தலை கீழாக மாறாமலும் காணப்பட்டன. உடனே இவர் அவ் விநோதக் கருவியை எடுத்துக்கொண்டு வெனிஸ் நகரத்திற்குச் சென்றார். சென்றதும், அந்நகர ஜனங்களுக்கு அக் குழாயின் வழியாக வஸ்துக்களைக் காட்ட ஆரம்பித்தார். அந்தக் கருவியின் உபயோகத்தைக் கண்ட ஜனங்கள், தங்களுக்கும் ஒவ்வொன்று வேண்டுமெனக் கேட்க, இவர் அவ்வாறே செய்து கொடுத்தார். இவருக்குச் சம்பளமும் இருமடங்காக உயர்த்தப் பட்டது. பின் இவர் பெரிய நச்சுக் குழாய் (Telescope) ஒன்றைத் தானே செய்து முடித்து வானத்திலுள்ள கிரகங்களையும், நக்ஷத்திரங்களையும் நோக்க ஆரம்பித்தார். இவர் அதன் வழியாக ஆகாயத்தில் கண்ட அற்புதங்களை என்னென்று கூறுவது! சந்திரனைக் கூர்ந்து நோக்கியதில், பூமிமாதிரியே அதிலும் மேடு, பள்ளம், மலை, குன்று, கடல் முதலியன இருப்பதைக் கண்டார். அத்துடன், பூமியும் மேகத்தால் மூடப் பட்டபோது சந்திரனைப் போன்றே கொஞ்சம் பிரகாசமுடைய கிரகம் என்றும் அறிந்தார்.

1610-ம ஆண்டு ஜனவரித் திங்கள் 7-ம் தேதி யன்று நச்சுக் குழலின் வழியாக பிரகஸ்பதிக கிரகத்தைப் பார்த்துககொண்டிருக்கும் போது, அதன் பக்கத்தில் மூன்று சிறிய நக்ஷத்திரங்கள் இருப்பதைக் கண்டார். மறுநாள் பிரகஸ்பதிக் கிரகம் அம் மூன்று நக்ஷத்திரங்களுக்குச் சமீபத்தி லிருந்தது. 10-ம் தேதி இரண்டு நக்ஷத்திரங்கள் மட்டும் இருந்தன. 11-ம் தேதியும் இரண்டு நக்ஷத்திரங்களே இருந்தபோதிலும் ஒன்று மட்டும்

பெரிதாகவும், மற்றொன்று சிறிதாகவும் இருந்தன. 12-ம் தேதி மூன்றும் தோன்றின. 13-ம் தேதி நான்கு நக்ஷத்திரங்கள் தென்பட்டன. பிறகு நான் கிற்கு மேல் தோன்றவில்லை. உடனே கலீலியோ, பூமியைச் சுற்றிச் சந்திரன் செல்வதைப் போன்றே, பிரகஸ்பதி கிரகத்தைச் சுற்றியும் நான்கு உபக் கிரகங்கள் செல்கின்றன என்பதை வெளியிட்டார். இவ்விஷயம் நாடெங் கும் வெகு விரைவில் பரவலாயிற்று. ஆயின், பலர் இதை நம்பாமல் மறுத் தார்கள். சிலர் இதைத் தடுப்பதற்கு எவ்வளவோ இடையூறுகளெல்லாம் செய்த போதிலும், இறுதியில் ஒப்புக்கொள்ள வேண்டியதாயிற்று. (1892-ம் ஆண்டில் 5-வது உபக்கிரகமும் ஒன்றுளதாகக் கண்டுபிடிக்கப் பெற்றது.)

கலீலியோவின் வாழ்நாட்களின் நிலைமையை நன்கறிவதற்கு, அக்காலத் தின் நிலைமையை அறிய வேண்டியது அவசியம். அக்காலத்திலிருந்த கிறிஸ் தவ மதக் கொள்கைகள் சாஸ்திர அபிவிருத்திக்கு மிகவும் இடைஞ்சலா யிருந்தன. சத்திய வேதத்தில் கூறியுள்ள விஷயங்களுக்கு மாறானவைகளும், அவர்கள் அநுசரித்து வந்த கொள்கைகளுக்கு விரோதமானவைகளும் பெரும்பாவம் எனக் கிறிஸ்தவ மதத் தலைவர்கள் கருதினார்கள். அன்றியும், அக்காலத்தில் கிறிஸ்தவ மதத் தலைவரான போப் (Pope) என்பவருக்குச் சகல அதிகாரங்களு முண்டு. ஒருவன் புதிய கொள்கையை ஸ்தாபிப்பானாகில் அவனைச் சிறைச்சாலையில் அடைத்து விடுவர். சில சமயங்களில் அவனுக்கு மரண தண்டனை விதிப்பதும் உண்டு. போப்பும், அவரது சகாக்களும் பூமியே அண்டங்களுக் கெல்லாம் பிரதானமென்றும், சூரியனே பூமியைச் சுற்றி வருகிறதென்றும் நம்பி யிருந்தார்கள். கோபர்னிகஸ் (Copernicus) போன்ற நிபுணர்கள், பூமி முதலிய கிரகங்களே சூரியனைச் சுற்றி வருகின் றன வென்று கூறியிருப்பினும், அதை நம்பக்கூடாதென்றும், மீறி நம்புபவ ருக்குத் தக்க தண்டனை விதிக்கப்படுமென்றும் போப் கட்டளையிட்டிருந்தார்.

இது நிற்க, கலீலியோ, சனிக்கிரகம் மூன்று பாகமாயுள்ளது என்றும், வெள்ளிக் கிரகத்திற்குச் சந்திரனைப் போன்றே வளர் பிறை, தேய் பிறைகள் உண்டென்றும் தூர திருஷ்டிக் கண்ணாடியின் உதவியால் கண்டு பிடித்து உலகத்தவர்க்கு உணர்த்தினார். இதன்றியும், சூரியனில் கருப்புப் புள்ளிகள் இருக்கிற தென்பதையும் கண்டு பிடித்தார். இவைகளெல்லாம் கிறிஸ்தவ மதத் தலைவர்களுக்குக் கலீலியோவின் மீதிருந்த வெறுப்பை அதிகரிக்கச் செய்தன.

கலீலியோ, பாதுவாவில் அதிக வேலையுள்ளதென்றும், தமக்கு ஓய்வு கிட்டு மாயின் அதிக சாஸ்திர ஆராய்ச்சி செய்யக் கூடுமென்றும் தம் நண்பரான டஸ்கனி (Tuscany) பிரபு காஸ்மோ (Casmo) என்பவருக்கு எழுத, உடனே அவர் இவரை பாதுவாவினின்றும் ப்ளாரென்ஸ் (Florence)க்கு வரவழைத் துக் கொண்டார். இந்தச் செய்கையே இவருக்குப் பின்னால் நேர்ந்த கஷ் டங்களுக்கெல்லாம் காரணமாயிருக்கிறது. ஏனெனின், வெனிஸ் நாடா னது சுயேச்சையான குடியரசாயும், டஸ்கனியானது போப்பிற் கடங்கிய ஓர் ராஜ்யமாயு மிருந்தது.

கலீலியோ, அக்காலத்துக் கொள்கைகளுக்கு மாறான பல விஷயங்களைக் கண்டு பிடித்ததும், கோபர்னிகஸின் கொள்கைகளை அனுசரிப்பதும் போப்பிற்குச் சற்றும் பிடிக்கவில்லை. இவர் மதத்துவேஷி எனப் போப்பினால் கருதப்பட்டார். மதாச்சாரியர்கள் இவருக்குத் தக்க தண்டனை விதித்து

இவரது ஆராய்ச்சிகளை யெல்லாம் அடக்கிவிட வேண்டுமென நிச்சயித்தார் கள். 1615-ம் ஆண்டு இவரைத் தன் சமுகத்திற்கு வரும் டி போப் உத்தர விட்டார். இவரும் அங்ஙனமே சென்று ரோமா புரியிலுள்ள கனவான்களுக் கும், மதாச்சாரியர்களுக்கும் தமது நச்சுக் குழாயைக் காட்டித் தாம் கண்டு பிடித்த விஷயங்களைப் பற்றி உபன்யசித்தார். போப்பும், அவரது அமைச் சர்களும் கலீலியோவை நோக்கி, பூமி சுற்றுகிற தென்பதை நம்பக்கூடா தென்று உத்தரவிட்டு ஊருக்கனுப்பி விட்டார்கள். பிறகு கொஞ்ச காலம் இவர் தமது இரு புத்திரிகளுடன் சுகமாக வாழ்ந்து வந்தார்.

இவருடைய நண்பரான பார்பெரினோ (Barberino) என்பவர் 1623-ம் ஆண்டில் போப்பாக நியமிக்கப் பெற்றார். உடனே கலீலியோ ரோமா புரிக் குச் சென்று தமது நண்பருக்கு உயர் பதவி கிட்டியதைக் குறித்து அவரை வாழ்த்தி உபசரித்தார். பின்னர் இருவரும் நண்பராகவே பிரிந்தார்கள். இவர் பிளாரென்ஸை அடைந்தவுடன், "டாலமி, கோபர்னிகஸ் இவர்களின் கொள்கைகளுக்குத் தர்க்கம்" என ஓர் நூலை வெளியிட்டார். அந்நூலில் டாலமி கக்ஷிக்காரரைப் பற்றி மிகவும் தாக்கி எழுதப்பெற்றிருந்தது. உடனே கலீலியோவின் விரோதிகளிற் சிலர் போப்பினிடம்போய் அப்புத்தகத்தில் மூடனுக்கப்படும் டாலமி கக்ஷிக்காரனைப் பற்றி எழுதினதெல்லாம் போப் பைக் குறித்தே கலீலியோ எழுதினதாகக் கூறினார்கள். உடனே போப்பிற் குக் கோபம் மூண்டுவிட்டது. கலீலியோவை ரோமா புரிக்கு வந்து சேரு மாறு உத்தரவிட்டார்.

1633-ம் வருஷம் பிப்ரவரி மாதம் 14-ம் தேதி கலீலியோ ரோமாபுரி வந்து சேர்ந்தார். உடனே போப்பும், அவரது சகாக்களும் இவரது கொள் கைகளைப் பரீக்ஷிக்க ஆரம்பித்தனர். பலவித ஹிம்சைகளுக்கு உள்ளாக்கினார் கள். ஜூன் மாதம் 21-ம் தேதி இவரைக் கண்டிப்பாய்ப் பரீக்ஷிக்க ஆரம் பித்தனர். ஹிம்ஸை செய்தாவது, பயமுறுத்தியாவது கலீலியோ அது வரை யில் சொல்லிவந்த தெல்லாம் தப்பிதம் என்று ஒப்புக் கொள்ளுமாறு செய் வதே மேற் சொன்ன பரீட்சையின் நோக்கம். பரீட்சை மூன்று தினம் நடந் தது. அம்மூன்று நாட்களில் என்ன நடந்ததோ, எத்தகைய கொடுமைகள் செய்தனரோ ஈசன்தான் அறிவான். அந்தோ! அம்மாதிரியாக இவரை ஹிம் ஸிக்கும்போது ஹிம்ஸை பொறுக்கமாட்டாமல் அவர்கள் சொல்வதை யெல் லாம் செய்வதாக ஒப்புக்கொண்டார். உடனே தமது செய்கைகளும், கொள் கைகளும் பிசகானவை யென்றும், அவற்றை இனித் தாம் நம்புவதில்லை யென்றும் ஓர் பத்திர மெழுதி அதில் கலீலியோவைக் கையெழுத்திடுமாறு செய்தனர். கையெழுத்துச் செய்த பிறகும் இவருக்கு ஆயுள் வரை சிறை வாசம் விதிக்கப்பட்டது. ஆயின், கொஞ்ச காலத்திற்குப் பின் இவரை, ஆர் ஸெட்ரி என்னுங் கிராமத்திற்குச் சென்று, வெளியில் போகாமலும், ஒருவ ருடனும் பேசாமலும், தமது வீட்டினுள்ளேயே வசித்து வருமாறு கட்டளை யிட்டு அவ்விடத்திற் கனுப்பி விட்டார்கள். இதனிடையில் இவரது கண் பார்வையும் கெட்டது. இம்மாதிரியாக அநேக கஷ்டங்களை அனுபவித்துக் கடைசியில் 1642-ம் வருஷம் ஜனவரி மாதம் 8-ம் தேதி தமது 78-வது வய தில் தமது பூத வுடம்பை நீத்துப் புகழுடம் பெய்தினார். சாஸ்திர அபி விருத்திக்கு இத்தகைய இன்னல்கள் மேனாட்டிலு மிருந்தன வென்பதைக் கேட்க நமக்கு ஆச்சர்ய முண்டாகிறது.






# வேதாந்த சாரசங்கிரக வசனம்.

(485-ம் பக்கத் தொடர்ச்சி.)

(பூ. ஸ்ரீநிவாசன், தமிழ்ப் பண்டிதர், சித்தூர்.)

## 'தத்துவம்' பத அர்த்தம்.

குரு:—அறிவுள்ள மாணவா! உன் தவம் பலித்தது. இந்த மகா வாக்கியத்தின் அர்த்தத்தைக் கேட்ட மாத்திரத்திலேலே சந்தேகமற்ற ஞானமுண்டாம். எதுவரையில் இவ்வர்த்தத்தை ஒருவன் நன்கு விசாரிக்கவில்லையோ அதுவரையில் அவனுக்கு ஜனன மரணமாகிய சம்சாரம் பெருகிக்கொண்டே யிருக்கும். 'தத்துவமசி' என்னும் வாக்கியார்த்தத்தின் அபரோக்ஷ ஞானத்தால் ('பிரத்தியேகாத்மா உண்' டென்றெண்ணுதல் பரோக்ஷ ஞானம் 'நான் பிரத்தியேகாத்மா' வென்று தன்னைப் பிரத்தியேகாத்மாவாக வறிதல் அபரோக்ஷ ஞானமாம். கடம் உண்டென்றறிதல் பரோக்ஷமும், இது கடம் என்றறிதல் அபரோக்ஷமுமாம் என்றறிக.) சத்புருஷர்களுக்கு மோக்ஷம் சித்திக்கின்றது. ஆகையால் முக்தியை விரும்பினவனுக்குப் பந்த விடுதலைக்கான மகாவாக்கியார்த்தமே தெரிந்து கொள்ளத் தக்கதாம். ஆதலால் ஏகாக்கிர சித்தத்துடன் கேள்.

பண்டிதோத்தமர்களால் மகாவாக்கியங்களுக்கு வாச்சியம், லட்சியம் முதலிய பேதங்களாக அனேக அர்த்தங்கள் சொல்லப்பட்டன. அவற்றைக் கேள்.

(இருக்கு, யசுர், சாமம், அதர்வணம் என்னும் நான்கு வேதங்களிலுமுள்ள மகா வாக்கியங்கள் நான்கு. அவை பிரஞ்ஞானம் பிரமம், அகம்பிரமாஸ்மி தத்துவமசி, அயமாத்மாப் பிர்மம் என்பவையாம். அவற்றுள்,

"சுயமதுவாந் தத்வமசி யென்னும் வாக்யம்
சொல்லுமுப தேசமகா வாக்ய மாகும்
இயலுமகம் பிரமாஸ்மி யென்னும் வாக்யம்
இலகுமனு பூதிமகா வாக்ய மாகும்
அயல்மருவாப் பிர்ஞ்ஞானம் பிரம வாக்யம்
மனனத்தி னப்யாச வாக்ய மாகும்
அயமான்மாப் பிரமமென வறையும் வாக்யம்
அதற்கெல்லாம் சம்மதமாம் வாக்ய மாமே.

என்று ரிபுகீதை கூறுகிறபடி, தத்துவமசி மகாவாக்கியம் உபதேச வாக்கியமாயிருத்தலின் அதன் அர்த்தமே எல்லா நூல்களினும் உரைக்கப்படுமென்றறிக.)

## வாச்சியார்த்தம்.

அர்த்தம் வாச்சிய மென்றும் லட்சிய மென்றும் இரண்டு விதமாகக் கூறப்படுகின்றது, அவற்றுள் முதலில் வாச்சியார்த்தத்தைக் கூறுகிறேன் கேள்.

ஓர் சொல்லிற்கு (சப்தத்திற்கு) அதன் அர்த்தத்தோடுள்ள சம்பந்தம் சப்தத்தின் விருத்தி எனப்படும். அந்த விருத்தி சக்தி, லட்சணை என்னும்

பேதத்தால் இருவகையாம். சப்தத்திற்கும் அதன் அர்த்தத்திற்கும் உள்ள நேரான சம்பந்தம் சக்தி விருத்தியாம். அச் சக்தி விருத்தியினு லறியப்படுவது வாச்சியார்த்தமாம். அந்த வாச்சியார்த்தத்தின் சம்பந்த மெதுவோ அது லட்சண விருத்தி எனப்படும். அந்த லட்சண விருத்தியினு லறியப்படுவது லட்சியார்த்தமாம்.

(விரிவஞ்சிச் சுருங்கக் கூறப்பட்டது. மேல் வருவனவற்றை ஊன்றி நோக்கின் எளிதிற் புலனும்.)

'நீலோற்பலம்' என்னுமிடத்து நீலம் என்னும் பதத்தின் அர்த்தத்திற்கும் உற்பலம் என்னும் பதத்தின் அர்த்தத்திற்கும் வாச்சியார்த்தம் பொருத்தமுடையதா யிருக்கின்றது. அதுபோலத் 'தத்துவமசி' என்பதில் வாச்சியார்த்தம் பொருந்துவதில்லை. நீலோற்பலம் என்னுமிடத்து நீல சப்தத்திற்கும் உற்பல சப்தத்திற்கும் விசேஷண விசேஷிய பாவ சம்பந்த மிருக்கின்றது. (ஒன்றைப் பிறவற்றினின்றும் பிரித்தறிவிப்பதற் கேதுவாயிருப்பது விசேஷண மெனப்படும். விசேஷணத்தினுற் பிரித்தறிவிக்கப்பட்டது விசேஷிய மெனப்படும் என்றறிக.) எங்ஙனமெனின்:

நீல சப்தத்திற்கு உற்பல சப்தத்தை விசேஷணமாக்கினுல் நீல நிறமுடைய வேறு வஸ்துக்களைப் பிரித்து 'உற்பல நீலம்' என்றறிவிக்கின்றது. உற்பல சப்தத்திற்கு நீல சப்தத்தை விசேஷணமாக்கினுல் வெண்மை முதலிய நிறங்கள் நீக்கப்பட்டு 'நீலமாகிய உற்பலம்' என்றறிவிக்கின்றது. இவ்வாறு விசேஷண விசேஷிய பாவ சம்பந்தம் பொருத்தமா யிருத்தலின் எவ்வித பிரமாணத்திற்கும் விரோதமின்று. ஆதலால் நீலோற்பலம் என்னுமிடத்து வாச்சியார்த்தம் பாதிக்கப்படாமல் நன்கு பொருந்தி யிருக்கின்றது. அதுபோலத் 'தத்துவமசி' என்னுமிடத்து வாச்சியார்த்தம் பொருந்துவதின்று. ஏன்? எனின்; பிரத்தியக்ஷாதி விரோதமுண்டு. அது யாதெனில்.

(தத்துவமசி என்பதற்கு 'அது நீயா யிருக்கிறாய்' என்பது பொருளாம். தத்=அது, துவம்=நீ, அசி=இருக்கிறாய், அது என்பது பிரஹ்மம், நீ என்பது ஜீவன், அசி என்பது ஐக்கியம்.)

'தத்' பதத்திற்கு வாச்சியார்த்தம் சர்வேசுவரத்துவம், சர்வஞ்ஞுத்துவம், சுவதந்திரத்துவம் முதலான குணங்களால் சர்வோத்தமனும், சத்திய காமனும், சத்திய சங்கற்பனுமாகிய ஈசுவரனும். 'துவம்' பதத்திற்கு வாச்சியார்த்தம் கிஞ்சிஞ்ஞனும், துக்கஜீவிதனும், பந்தத்திற் கட்டுண்டவனும், ஈசுவரனையே கதியாக வுடையவனும், பிரகிருதி சம்பந்த லட்சணமுடையவனுமாகிய ஜீவனும்.

இவ்வாறு ஜீவேசுரர்களுக்கு விரோதம் பிரத்தியட்சமாகக் காணப்படுகின்றது. ஒன்றற்கொன்று விருத்த (விரோத) லட்சணமுடைய ஜீவேசுவரர்களுக்கு ஐக்கியம் எவ்வாறு பொருந்தும்? இத்தகைய விரோத லட்சணமுள்ள இருவரும் ஒன்றெனச் சொல்லுவது நெருப்புக் குளிர்ந்திருக்கிறது என்பதை யொக்கும். பிரத்தியட்சாதிகள் விரோதிக்கிறதென்று ஐக்கியம் கூறாது விடுவோமெனின் சுருதி விரோத முண்டாகும். பிரஹ்மத்திற்கு அன்னியமாக உலகமாயினும் ஜீவனுயினும் இல்லையாகலின் ஐக்கியமே சுருதி சம்மதமாம். சுருதிக்கு விரோத முண்டாகாதபடி கூறவேண்டுமாயின் அபேதமே கூறல் வேண்டும். அபேதங் கூறின் பிரத்தியக்ஷாதிகளுக்கு விரோதம் நேரிடுகின்றது. எங்ஙனஞ் சொல்வது? இதற்கொரு வழியுண்டு, அதனைக் கூறுகிறேன், கேள்.

விரோத பாகங்களை நீக்கி அவிரோத அம்சங்களைக் கிரகிக்கின் பிரத்தியக்ஷாதிகளும் பாதிக்கமாட்டா. சுருதி விரோதமு முண்டாகாது.

## லட்சியார்த்த நிரூபணம்.

**சீடன்:**—விரோத பாகங்களெவை? அவற்றை விடுவ தெங்ஙனம்?

**குரு:**—பிரிய சீடனே! வாச்சியார்த்தம் சித்திப்பதற்காக லட்சணை அங்கீகரிக்கப்படும். ஏனெனில், வாச்சியார்த்தத்தினால் இஷ்டார்த்தம் சித்திக்காவிடத்து லட்சணையைக் கொண்டு இஷ்டார்த்தத்தை யடைதல் வேண்டும், எனப் பெரியோர் கூறுவர்.

அந்த லட்சணை ஜஹதீலட்சணை, அஜஹதீலட்சணை, ஜஹத்ஜஹதீலட்சணை (பாகத்தியாக லட்சணை) என மூவகையாம். இவை முறையே விட்ட லக்கணை, விடாத லக்கணை, விட்டு விடாத லக்கணை எனவும் கூறப்படும். லட்சணை தமிழிலக்கணத்தில் ஆகு பெயர் எனப்படுகின்றது. ஆகவே இம் மூன்று லட்சணைகளும் விட்ட வாகு பெயர், விடாத வாகு பெயர், விட்டு விடாத ஆகு பெயர், எனத் தமிழிலக்கணங் கூறும்.)

(1) ஜஹதீ லட்சணை:—(வாச்சியார்த்தம் முழுதும் விடப்பட்டு அதன் சம்பந்தம் அங்கீகரிக்கப்படின் அது ஜஹதீ லட்சணையாம்.)

'கங்கையில் இடைச்சேரி' என்னு மிடத்து இந்த லட்சணை அங்கீகரிக்கப்படுகின்றது. அதுபோலத் 'தத்துவமசி' வாக்கியத்தில் பொருந்தாது. எவ்வாறெனின்:

கங்கைக்கும் இடைச் சேரிக்கும் ஆதார ஆதேய பாவம் கூறப்பட்டது. இந்த வாக்கியத்தில் வாச்சியார்த்தம் முழுவதும் விரோதமுடையதாகின்றது. ஆகையால் கங்கையின் சம்பந்தமுடைய கரையினிடத்து லட்சணை பிரவர்த்திக்கின்றது. ஏனெனில் கங்கை என்னும் பதத்திற்குப் பிரவாகம் (நீர்ப் பெருக்கு) வாச்சியார்த்தம். பிரவாகத்தில் இடைச்சேரி (ஓர் ஊரின்) யின் இருப்பு சம்பவியாது. ஆதலின் கங்கையின் சம்பந்தமான கரையில் இடைச்சேரி என்று லட்சணையால் பொருள் கொள்ளப்படுகின்றது. இது மகா வாக்கியத்திற்குப் பொருந்தாது. ஏனெனில்: 'நீ பிரஹ்மமாயிருக்கிறாய், (தத்துவமசி) என்னுமிடத்து உனக்கும் பிரஹ்மத்திற்கும் கிஞ்சிஞ்ஞத்துவம் சர்வஞ்ஞத்துவம் முதலிய அமிசங்களில் மாத்திரமே விரோத மிருக்கின்றதன்றி, முழுவதிலும் விரோதமில்லை; இருவரிடத்துமுள்ள ஞானத்திற்கு விரோதமில்லை. ஆதலால் இங்கு வாச்சியார்த்தம் முழுவதையும் விட வேண்டிய அவசியமில்லை. மேல் பாகம் கடினமாயிருத்தலால் தேங்காய் முழுவதையும் விட்டிடலாமா?

'கங்கையில் இடைச் சேரி' என்பதில், கங்கை என்னும் பதம் பிரவாக ரூபமாகிய தன் அர்த்தத்தை விட்டுக் கரை யென்னும் அர்த்தத்தைக் கூறுவது போலத், 'தத்' 'துவம்' என்னும் பதங்கள் வாச்சியார்த்தம் முழுவதையும் விட்டு வேறு அர்த்தத்தைக் கூறின் ஜஹதீ லட்சணை பொருந்துவதாகும். ஆனால் அப்பதங்கள் வாச்சியார்த்தம் முழுவதையும் விட்டு லட்சியார்த்தத்தைப் பொருந்தா. ஆதலின், மகாவாக்கியத்தில் ஜஹதீ லட்சணை உபயோகமாதலில்லை. (தொடரும்)

# கம்பர் கவி இன்பம்

## முன்னுரை

ஆரியூர், வ. பதுமநாப பிள்ளை.

"கற்பார் இராமபிரானை யல்லால் மற்றுங் கற்பரோ!
புற்பா முதலாப் புல்லெறும்பாதி யொன்றின்றியே
நற்பால் அயோத்தியில் வாழும் சராசரம் முற்றவும்
நற்பாலுக் குய்த்தனன் நான்முகனார் பெற்ற நாட்டுளே"—சடகோபர்.

இராமபிரான்! ஆ! எத்துணை அழகிய இனிய திருநாமம்! புண்ணிய பூமியாகிய இப்பாரதகண்ட மெங்கணும் எத்துணை லட்சக் கணக்கான மக்களால், அப்புனிதத் திருநாமம் பக்தியோடு உச்சரிக்கப்பட்டு வருகின்றது! அருட்பெருஞ் சோதியாம் ஆண்டவன், உய்வுபெறும்படி உயிர்கட்கு மனிதப் பிறவியை வழங்கி, உண்மை தெளிந்து நன்மை யடைதற்கென உயரிய அற நூல்களையும் அளித்தருளியும், ஆற்றைக் கடக்கக் கொடுத்த படகைக்கொண்டு ஆற்றுப் பெருக்கின் வழியேவிட்டு கரை யேறு தொழிவாரைப்போல், ஐம்புலன்கட்கு அடிமைப்பட்டு உயிர்க்கு உறுதி பயக்கும் உண்மைப் பொருள்களை உணராது, பிறவிப்பெருங் கடல் நீந்தகில்லாது வருந்துதல் கண்டு திருவுள்ளம் இரங்கித், தனது தனிப்பெரும் பெருமையையும் பொருட்படுத்தாது இராமபிரானாக மனிதவடிவிற் பிறந்தருளினான். ஏனைய நாமங்களெவற்றிலும் இராமநாமம் மிகச் சிறந்த தாகும். திருமாலுக்கு உரிய 'நாராயணாய' எனும் மந்திரத்தின் உயிரெழுத்தாய் 'ரா' என்பதையும்; சிவபரஞ்சுடரின் திருவைந் தெழுந்தாம் 'நமசிவாய' எனும் மந்திரத்தில் ஜீவாட்சரமாகிய 'ம' எனும் இரண்டாவது எழுத்தையும் இணைப்பின் ஏற்படுவதே 'ராம' நாமமாகும். ஆகவே, ராம நாமத்தை மெய்யன்போடு உச்சரிப்போர் எவரும், அவ்விருபெருங் கடவுளரின் திருவருளையும் பெறுவ ரென்பதில் ஐயமில்லை. நமது பாரதகண்டம் முழுவதும் வைணவரால் மட்டுமன்றி, சைவர்களாலும் இராமாயணம் பாராயணம் செய்யப்பட்டு வருவது எவரும் அறிந்ததே. இராமபிரான் மனிதசமூகத்திற்கே ஒப்புயர்வற்றதொரு இலட்சிய புருடனாய் இலங்குகின்றான்; மற்றும் அப்பெருமான் வெற்றி மிக்க வீரர் திலகனாகவும் விளங்குகின்றான்; அம்மட்டோ! அவனே தனிப்பெருங்கருணையாளனும் இறைவனது அவதாரமும் ஆகின்றான். இம் மூன்று நிலைகளே இராமாயண வளர்ச்சியாகும்.

இயற்கைக் காட்சி இன்பத்தில் திளைத்து இறைவனது இன்னருள் குறித்து வனத்தில் தவம் மேற்கொண்டு வாழ்ந்த முனிவர் பெருமானும் வான்மீகி, மக்கள் வாழ்க்கைக்கே சிறந்த இலக்கிய புருடன் எவனென

நாரதரை வினவினர்; அவரும், அத்தகைய சீரிய இலக்கிய புருடன் சீதா பதியே என்பதை வான்மீகர்க்கு விளக்கிக் காட்டினர். அதுகேட்ட வான்மீகர் இராமனது சரிதையைக் காவியவடிவில் அமைத்து உலகுக்கு உதவ ஆர்வங்கொண்டு, ஆண்டவன் திருவருட்டுணை கொண்டு அவ்வாறே அமைத்தருளினர். முனிவர் ஆசிரமங்களில் மனித இனத்திற்கே தனிப்பெரும் இலக்கியமாக விளங்கிவந்த இராமாயணம், மன்னர் வதியும் மாளிகையை அடைந்து, வேந்தர்க் கெலாம் இலக்கிய புருடனும் சீரிய வீரனது தீஞ்சுவை மிக்க காவியமாயிற்று; பின்னர், அரண்மனையி னின்றும் மக்களது அகங்களை அடைந்த அவ்வாதி காவியம், அவதார புருடனது புண்ணிய சரிதையாயிற்று. முதலில், மனித வாழ்க்கைக்கு இலக்கியமாய் இலங்கிப், பின்னர் சீரிய வீர காவியமாய்த் துலங்கி, இறுதியில் பரதகண்டம் எங்கணும் பரந்து புனிதத் தன்மைபொருந்திப் புண்ணிய சரிதையாய் விளங்கிவரும் இராமாயணம் நமது பரதகண்டத்திற் பிறந்த தொன்றே, நம்மவர்க்கு ஒப்புயர்வற்ற தனிப்பெரும் பெருமையாகும்.

வான்மீகர்க்கு முற்பட்ட சிலரும் இராமகதையை வசன வழியில் அமைத்துச் சென்றுள ரென்று சிலர் கூறுவர்; எனினும், ஜன சமூகத்திற்குப் பயன் எதிர்பாராத சீரியதொண்டு செய்தல் வேண்டுமென்ற நோக்கம் ஒன்றே கொண்டு, தெய்வத்திருவருள் துணைகொண்டு, புனிதம் பொருந்திய—அழகு மிக்க—எளிய நடையில் காவிய வடிவில் வான்மீகி அமைத்துச் சென்ற இராம கதையே, இன்றளவும் நிகரற்ற பெருமை பெற்று நிலவிவருகின்றது. அத்தகைய இராமாயணம், இற்றைக்கு ஆயிரம் வருடங்கட்கு முன்னர் வரை, என்றென்றும் பைந்தமிழர்க்கு இன்பம் பயந்து வரும் வண்ணம், தேனினும் இனிய தீஞ்சுவை மிக்க செந்தமிழ் மொழியிலே காவிய வடிவில் அமைந்து எங்கும் பரவாதிருந்து வந்தது. அக்கதை கர்ணபரம்பரைக் கதைகளுள் ஒன்றாகவே, அக்காலத்தில் வழங்கி வந்திருக்க வேண்டும். கம்பர்க்கு முன்னரே, சங்கம் மருவிய சான்றோர் சிலரும் தமிழில் இராம கதையைப் பாடியுளரென்று சிலர் பகர்ந்தாலும், அவை கம்ப ராமாயணத்தைப்போல் பிரசித்தி பெற்று எங்கும் பரவுவனவாகக் காணோம்.

ஒரு நாட்டின் உண்மைச் செல்வம் கேவலம் அழிதன்மாலையதாய பொருட் செல்வமன்று; என்றென்றும் அழியாது, அந்நாட்டு மக்கட்கு நல்லறிவு புகட்டி நன்னெறிப் படுத்தும் சீரிய கலைச்செல்வமே உண்மைச் செல்வமாகும். செயற்கை யின்பங்களிலேயே சிந்தையைச் செல்விக்கும் பொருட் செல்வம் ஒரு நாட்டாரை உய்விப்பதாகாது; எல்லாம் வல்ல இறைவனது இன்னருட் திறத்தை இனிது புலப்படுத்தி நிற்கும் இயற்கைக் காட்சிகளையும்; இறைவனது திருவுள்ளத்திற்கு இனியனவாய இயற்கை அறங்களையும் சுருங்கச் சொல்லி விரிந்த பொருளைப் பெறுவிக்குமாறு சீரிய கவிகளாற் செய்யப்பட்ட காவியங்களே, ஒரு நாட்டாரின் உய்வுக்குச் சிறந்த

துணையாகும். அத்தகைய இயற்கை இன்பம் நிறைந்து செந்தமிழ் நாட்டில் நிலவிவரும் சீரிய காவியங்களுள், 'விருத்த மென்னும் ஒண்பாவில் உயர் கம்பன்' என்று புகழப்பெற்ற கவிச் சக்கரவர்த்தியாகிய கம்பர் பெருமானால் இயற்றப்பட்ட கம்பராமாயணமே தலைசிறந்த தென்பது மிகையாகாது.

கம்ப ராமாயணத்தில் என்ன இல்லை? அன்பர்காள்! உங்கட்குவேண்டுவ தென்னை? கருத்தை ஈர்த்துக் கவலையை ஓட்டிக் களிப்பெருங் கடலில் ஆட்டுவிக்கும் இயற்கை இன்பம் வாய்ந்த—அழகு சான்ற—அற்புதம் மிக்க அரிய வருணனைகளா? அவ்வவ் விடங்கட்கு ஏற்றவாறு அமைந்து, ஓதுந்தோறும் ஓதுந்தோறும் உள்ளத்தைக் கொள்ளைகொள்ளும் ஓசையின்பமா? கதைப் போக்கில், மனித வாழ்விற்கு இன்றியமையாத நல்லற நெறிகளை, ஓதுவோர் உள்ளத்தில் வேரூன்றிப் பதியும் வண்ணம் உணர்த்துவிக்கும் இதோபதேசமா? படிக்கு மளவிலேயே அச்சத்தை அகற்றி, ஆண்மை யற்றோர்க்கும் புத்துணர்வு அளித்துக்,கிளர்ச்சியை விளைவிக்கும் அரியவீரச்சுவையா? ஆணவ முனைப்புகளை அறுத்து எறிவித்து, பொய்யின்பப் பொருள்களில் கொள்ளும் மையலைப் போக்கி, அன்பு நெறிப்படுத்தி இறைவனது திருவருளை எய்துவிக்கும் இனிய பக்திச் சுவையா? கேவலம் உடலளவில் தோன்றி விரைவில் ஒடுங்கும் காமப்பித்தைக் களைவித்து, ஒருவர் உள்ளத்தில் மற்றவரைக் குடி புகுவித்து இருவரையும் உடலிரண்டும் உயிரொன்றுமாகச் செய்வித்து, இன்பத்தும் துன்பத்தும் ஒத்த அன்பை உறுவித்து, செயற்கரும் வீரச் செயல்களையும் துணிந்து செய்யும் திறலை விளைவிக்கும் சீரிய காதற் சுவையா? படிக்கு மளவிலேயே தீவினையின் பயனைத் தெள்ளிதில் விளக்கி, நல்லறத்திற்கு புறம்பானவற்றில் வெறுப்பை விளைவிக்கும் அச்சச் சுவையா? தீமையே செய்தோர்க்கும் வன்மங்கொண்டு பழிக்குப் பழிசெய்ய மனங் கொள்ளாது அன்புளமே கொண்டு கடைசிவரை அன்னாரைத் திருத்தவே விரும்புவிக்கும் கருணைச் சுவையா? இன்னா செய்தார்க்கும் நன்னயமே செய்து, எதிர்த்து நின்றோரும் தலைவெட்கிக் குனியுமாறு செய்வித்தும், இறுமாந்தோரை இன்சொற்களால் அடக்குவித்தும், இழிந்தோர் இயல்பை உணர்த்தியும் உன்னுந்தோறும் உன்னுந்தோறும் உள்ளத்திற்கு உவப்பூட்டும் நகைச் சுவையா? வறுமையையும் பிணியையும் ஓட்டுவித்து, எங்கணும் நல்லறமே வளர்ந்தோங்கச் செய்வித்து, முடி மன்னர்கட்கும் குடிமக்கட்குமிடையே மெய்யன்பையே பெருக்குவிக்கும் சீரிய அரசியல் இன்பமா? பெண்மையின் பெருமையை விளக்கி, அணங்குகளின் சக்திகளைத் தெளிவிக்கும் அரிய கருத்துகளா? மனித வாழ்க்கைக்கு வேண்டப்படுவனவாய இன்றியமையாத படிப்பினைகள் அனைத்தும்—இன்பங்க ளெல்லாமும் கம்ப ராமாயணத்திலே மலிந்து கிடக்கின்றன. சுருங்கக் கூறுமிடத்து, கம்பர் பெருமான் இப்பாரதமணித் திருநாட்டையே பெரும் படம் பிடித்து வைத்துச் சென்றுளா ரென்றால், அஃது உயர்வு நவிற்சியாகாது. எனவே,

தனக்கு முன்னெழுந்த செந்தமிழ்க் காவியங்கள் பலவற்றையும், கம்ப ராமாயணம் வெயிலிடைத் தந்த விளக்குகளாக்கி விட்டதென்றே விளம்பலாம்.

இன்பங்கள் எவற்றினுஞ் சிறந்த இன்பம், செஞ்சொற் கவியின்பமே யாம். இராமன் ஆண்ட அயோத்தி இக்காலத்தே அழிந்துபட்டது உண்மையே; எனினும், இன்பப்பாக்களில் கம்பர் பெருமான் அமைத் தருளிய அயோத்தி அழிந்து பட்டதோ? இன்றும், அச்சீரிய நகரின் சிறப்புகளை கம்ப ராமாயணத்தின் கண் அகக்கண்ணாற் கண்டு ஆனந்திக்கின்றோ மன்றோ! மெய்யறிவாளர்கட்குச் சான்றோர் கவிகளில் தோன்றும் இன்பம், வேறெப்பொருளில் தோன்றக்கூடும்? பயில்வோர் தம்மை மறந்து இன்ப வயப்பட்டு நிற்குமாறு பயிலுந்தோறும் பயிலுந்தோறும் புதுப் புது இன்பங்கள் பற்பல எழுப்பி விடும் ஆற்றல், புலவர் பெருமக்களது கவிகட்கே யன்றி வேறு எதற்கு உண்டு?

"இம்பர் நாட்டிற் செல்வமெலாம் எய்தி அரசாண்டிருந்தாலும்
உம்பர் நாட்டிற் கற்பகக்கா ஓங்கு நீழ லிருந்தாலும்
செம்பொன் மேரு அனையபுயத் திறல்சேர் இராமன் திருக்கதையில்
கம்பநாடன் கவிதையிற்போல் கற்றோர்க்கு இதயம் களியாதே!"

—எனத் தமிழகம் நமது கவிஞர் பெருமானது சீரிய காவியத்திற்கு அளித்துள்ள மதிப்புரை, கம்பர் கவியின்பம் எத்தகைத் தென்பதை நன்கு விளக்கும். பார்வையளவில் தெளிந்து, கூர்ந்து நோக்குமளவில் பெரிதும் ஆழ்ந்திலங்கும் தடாகங்களைப்போல, சிறந்த கவிஞரின் கவிகளும் கற்றார்க்கும் மற்றோர்க்கும் எளிதில் பொருள்படும்படி தெள்ளிய நடையில் அமைந்து விளங்கினும், அவற்றை ஆராய்ச்சிக்கண்கொண்டு கூர்ந்து நோக்குவோர்க்கு, ஆழ்ந்த அரும் பொருள்கள் பலவற்றையும் புலப்படுத்துவனவாம். தோலை உரித்தபின்னர் சுவைக்க இனிமை பயக்கும் வாழைக்கனியை ஒத்து, சற்று ஆராய்ந்து நோக்கியபின் இன்பம் பயக்கும் பாக்களும்; சுவைத்த வளவில் உள்ளும்புறமும் சுவைமயமாய்த் தோன்றும் திராட்சைப்பழத்தை நிகர்த்து, படிக்குமளவிலேயே வாசகர்கட்குப் பேரின்பம் ஊட்டும் செய்யுட்களும்; மட்டை நார் ஓடு முதலியவற்றை வருந்தி அகற்றிய பின்னரே சுவைதரும் தேங்காயைப் போன்று, ஆராய்ச்சிக்கண்கொண்டு ஆழ்ந்து கூர்ந்து நோக்கிய பின்னரே சுவைபயக்கும் கவிகளும் கம்ப ராமாயணத்தில் மலிந்து கிடக்கின்றன.

இயற்கை யின்பம் நிறைந்த கம்பராமாயணத்தில், சிற்சில தனிக் கவிகளை எடுத்துக்கொண்டு ஒவ்வொரு அடிக்கும் தத்தம் மனம் சென்றவாறெல்லாம் 'குயுக்தி'யாக நான்கைந்து பொருள்களைக் கற்பித்து, உண்மைக் கவியின்பத்தைப் பாழ்படுத்தும் பிரசங்கப் புலிகள் பலர் தமிழ் நாட்டில் மலிந்து காணப்படுகின்றனர். அத்தகையோர் உண்மைக் கவியின்பம் எத்தகைத் தென்பதைச் சற்றும் உணர்வதே யில்லை. சிற்சில இடங்களில் அம்முறை இன்பந் தருவது உண்மையே யாயினும், எடுத்த கவிக்கெல்லாம் அம்முறையைக் கையாள்வது நன்றன்று. இயற்கைக்குப் பொருந்தாத விதம்விதமான அர்த்தங்களைக் கவிகளின் அடிகட்குக் கற்பித்து, பிரசங்கிகள் தமது வித்வத் சக்தியை வெளிப்படுத்த முயல்வதால், கம்பரின் முழுமுதல் நோக்கமாகிய இயற்கை யழகே சிதைக்கப்படுவதாகின்றது. இத்தகைய குறுகிய நோக்

கத்தை ஒழித்து, நாளுக்குநாள் பெரிதும் முன்னேற்ற மடைந்து வரும் மேனாட்டு ஆராய்ச்சி முறையைத் தழுவியும், கம்பரது தனிப்பெரும் சீரிய ஆராய்ச்சி செய்வதன் வாயிலாகக் கம்பர் கவி இன்பத்தைச் சுவைப்பதே செந்தமிழறிவாளர்களது கடமையாகும்.

ஆதிகாவியமாகிய வான்மீகி ராமாயணத்தின் வழிநூலாக இயற்றப்பட்டதே கம்பராமாயணம் எனினும், 'வான்மீகர் காவியத்தினும் பன்மடங்கு அழகுடையது கம்பர் கவிதை' என்பது நடுநிலை பிறழாது ஆராய்ந்தறிந்த அறிஞர் கண்ட உண்மையாகும். அதுபற்றி, முதனூலாகிய வான்மீகத்திற்கு எத்தகைய இழுக்குமில்லை. தந்தையினும் மைந்தன் சிறப்புடையவனாயின், தந்தை அத்தகையவனைப் பெற்றதனாலாய பெருமைக்கு உரியனாதல்போலக், கம்பர் கவிதை தோன்றற்கு காரணமாய் நின்ற வான்மீகத்தின் பெருமை பின்னும் அதிகப்படுமேயன்றிச் சற்றும் குறைந்திடாது. வழிநூலாகிய கம்ப ராமாயணத்தின்கண், முதனூலாகிய வான்மீகத்தோடு முக்கியமான சில இடங்களில் முரண்படும் வேற்றுமைகள் காணப்படுவது என்னையோ எனச் சிலர் ஐயுறுதல் கூடும். அஃது இயல்பே. தந்தை வருந்தி உழைத்துத் திரட்டி அளித்த அருஞ்செல்வத்தைப் பெற்ற நல்லறிவுடைய மகனொருவன், காலநிலைக்கேற்ப அதன்கண் கழிக்கத்தக்கன கழித்தும், சேர்க்கற்பாலன சேர்த்தும், மாற்றத்தக்கன மாற்றியும் சீர் திருத்துவதால் அச்செல்வம் எவ்வாற்றானும் சிறந்து விளங்குதல்போல, நூலின் இனிமையைப் பெருக்கவும் தமது காலத்தில் தமிழ் நாடு பெற்றிருந்த நன்னாகரிகத்திற்கு இயையவும், கம்பர் பெருமான் தமது காவியத்தை செவ்விதில் திருத்தி அமைத்திருப்பது நம்மவர்க்குப் பேரின்பம் ஊட்டுவதேயாம்.

வீரருட் சிறந்து, மனித வாழ்க்கைக்கு சீரிய இலக்கியமாக இலங்கும் ஒரு உத்தம புருடனது சரிதையை உரைப்பதுபோல் உரைத்து, 'இராம பிரானைப் பரம்பொருள்' என நாமே உணர்ந்து கொள்ளுமாறு அமைக்கப்பட்டிருப்பது வான்மீகி ராமாயணம்; உயிர்கள்மீது கொண்ட கருணைப் பெருக்கினால், உயர்வற உயர் நலமுடைய பரம்பொருளே இராமனாக-சக்கரவர்த்தித் திருமகனாக வந்தவதரித் தருளியதை ஐயத்திற் கிடமின்றி வெளிப்படையாக விளக்குவது கம்பராமாயணம். வடமொழிச்சொல் ஒன்றுகூடக் கலவாத தனித்தமிழ் நடையில் யாக்கப்பட்ட பழந்தமிழ் நூல்களே, தமிழ் நலன் நாடுவோரால் பயிலத்தக்கன என்று சிலர் செப்புவர். அத்தகைய மனப்பான்மை குறுகிய நோக்கைக் கொண்டதேயாம். தமது கவிதையின்கண் வடமொழிச் சொற்களை கம்பர் தாராளமாக எடுத்தாண்டிருப்பினும், கவியின்பம் எவ்வாற்றானும் அதனாற் குறைந்துவிடவில்லை. உலகவழக்கில் பெரிதும் விரவிப் பயின்று வந்துவிட்டனவும், எவர்க்கும் எளிதில் பொருள் படுவனவுமாய சிற்சில வடமொழிச் சொற்கள் அமைக்கப்பட்டுள்ள இடங்களில், உலக வழக்கில் இக்காலத்தில் அதிகம் பயிலாதனவும் புலமை வாய்ந்தோர்க்கே பொருள்படுவனவுமாய தனித் தமிழ் மொழிகளை அமைத்து விட்டிருப்பின், இக்காலத்திலே கம்பர் கவிதை கற்றோர்க்கேயன்றி மற்றோர்க்கும் பெரிதும் பயன்பட்டு வருவதேபோல், பலர்க்கும் இன்பந்தரும் பொது இன்பப் பூங்காவனமா யிராது.

உலக முழுதும் விளங்கிய கவிகளை எடுத்துக் கொள்ளுமிடத்து, மக்களது உள்ளத்தைப் படம்பிடித்து அவரவர் இயல்புகளை நேரிற்கண்டு

அறிவதேபோல அவரவர் கூற்றுகளாலேயே அவற்றைத் தெளிவு பெற விளக்கிக்காட்டும் முகத்தால், சொற்சித்திரங்கள் அமைத்துச் சென்ற பெருமை மூவர்க்கே பெரிதும் உரியதெனக் மொழியலாம். அவர்களாவார் ஆங்கிலத்தில் ஷேக்ஸ்பியரும், ஸம்ஸ்க்ருதத்தில் காளிதாசரும், செந்தமிழிற் கம்பருமாம். இம்மூவருள் ஷேக்ஸ்பியரும், காளிதாசருங்கூட காவிய அமைப்புத்திறத்தில் கம்பருக்குப் பின்னிட்டு விடுகின்றாரென்று சொல்வோமாயின், அஃது மிகையாகாது. கம்பர் கவிதையை ஆழ்ந்து படிக்கும்போது, வெறுங் கவிகளை மட்டும் பார்க்கின்றோமில்லை; அவ்வவ்விடங்களில் வருணிக்கப் படும் மனிதர்களையே அகக்கண்ணாற் கண்டு ஆனந்திக்கின்றோம். வெறும் வேதாந்தமாக, 'இப்படித்தான் நடக்கவேண்டும்; அப்படி நடக்கக்கூடாது' என்று ஜனசமூகத்திற்குக் கட்டளையிடுவதைவிட, நன்மை செய்தோர் அடையும் நலத்தையும் தீமை புரிந்தோர் எய்திய கதியையும் சரித்திர புருடர்களது வரலாறுகள் வாயிலாக வாசிப்போர்க்கும் கேட்போர்க்கும் ஆர்வம் ஊட்டுமாறு நல்லின்பம் மிக்க, தெளிய நடையில் எடுத்தியம்புவதால், பின்னைய முறையாலேயே மக்கள் தம்மை திருத்திக் கொள்ள முயல்வதற்குப் பெரிதும் விரும்புவரென்பதை விரித்துரைக்கவும் வேண்டுமோ?

உட்பொருள்களை அகழ்ந்தெடுத்துத் திறம்படக் கூறும் அறிஞர் சொல்லாற்றலுக்கேற்ற இன்பம் பயந்திடும் கம்பராமாயணச் சிறப்பை, எத்துணைச்சிறந்த பேரறிஞர் எடுத்துரைக்க முயன்றாலும் அஃது அளவில் அடங்காததாகி, 'உரை குறுக நிமிர் கீர்த்தி' உடையதாய், மேன்மேலும் வளர்ந்தே விடுகின்றது. அத்தகைய சீரிய காவியத்தைப் பாடிய கம்பரே, தாம் காவியம் செய்யப் புகுந்தது பற்றி, "ஓசை பெற்றுயர் பாற்கடல் உற்றொரு—பூசை முற்றவும் நக்குபு புக்கென—ஆசைபற்றி அறையலுற்றேன் மற்றிக்—காசில் கொற்றத் திராமன் கதையரோ."—என்று பாடிச் சென்றிருக்கும்போது, அறிவிலும் அனுபவத்திலும் ஆராய்ச்சியிலும் பிறவற்றிலும் மிகச்சிறியேனாகிய அடியேனோ 'கம்பர் கவி இன்ப'த்தை திறம்பட எடுத்து விளக்க வல்லவனாவேன்! எச்சிறப்புமில்லாத சிறியேனது உள்ளத்தை கம்பர் கவிதை கொள்ளை கொண்டு விட்டதனாலேயே, 'ஆசை வெட்கம் அறியாது' எனும் முதுமொழிக் கிணங்கத், தெய்வத்திருவருள் துணைகொண்டு சிறியேனது சிற்றறிவிற் கெட்டியவரை, இனி வரையத் தொடங்கும் புல்லுரைகளை, இளஞ்சிறார் நிலத்திற் கிழித்து விளையாடும் சிறுகோடுகளால் ஆகிய சிற்றிலை சிற்பநூன் முறைக்கு ஏலாதன வென்று சினங்கொள்ள மனங்கொள்ளாத சிற்பநூல் வல்லாரே போல், அன்போடு பொறுத்தருளி சிறியேனது பேரார்வத்தினையே ஆதரித்தருளுமாறு பெரியோர்களைப் பிரார்த்தித்துக் கொள்ளுகின்றேன். அடியவர்க் கெளியனாகிய சீதாராமனது கைம்மாறற்ற தனிப்பெருங் கருணையையே துணையாகக் கொண்டு, கம்பர் கவிதையிற் காணப்படும் பலதிறப்பட்ட இன்பங்களுள் சிற்சிலவற்றைப் பகுதி பகுதியாகப் பிரித்து, அடுத்த ஸஞ்சிகை முதல் தொடர்ச்சியாக எழுதவிருப்பதைச், செந்தமிழ் நாட்டன்பர்கள் அன்போடு ஆதரிப்பார்களென்று எதிர்பார்க்கின்றேன்.

"குணம்நாடிக் குற்றமும் நாடி, அவற்றுள்—மிகைநாடி மிக்க கொளல்."

(தொடரும்)

# தோல்வியின் வெற்றி

('ப்ரேம்சந்த்' ஹிந்தியில் எழுதிய "ஹார காஜீத்" என்ற கதையைத் தழுவி எழுதப்பட்டது.)

நெடு நாளாகக் கேசவன் மீது எனக்கு மனவருத்தம். வியாசம், பேச்சு, விநோதம் முதலிய துறைகளில் அவன் என்னைவிடப் பன்மடங்கு கெட்டிக்காரன். அவன் முன், சூரியன் ஒளியில் இருக்கும் விளக்கென நான் தோன்றினேன். அவன் என்னைவிடத் தாழவேண்டும் என்ற எண்ணம் ஒரு சமயம் என்னை வாதித்தது. கல்வி கேள்விகளில் எந்நாளும் நான் அவனை அணுக முடியாதவனாய் இருந்தாலுங்கூட, உலக விவகாரங்களில் நான் சிறந்தவனென்பதில் ஐயமில்லை. ஆனால் காதல் விஷயத்திலும் என்று அவன் என்னுடன் போட்டி போட்டானோ அன்றே என்மனம் விட்டுவிட்டது.

நாங்கள் இருவரும் எம். ஏ., படித்துக் கொண்டிருந்தோம். தத்துவ சாஸ்திரமே இருவரும் வாசித்தோம். புரோபசர் ராகவன் படிப்பில் நிகரற்றவர். தன்மகள் சாரதாளுக்குப் பதியாகக் கேசவனைவிட என்னையே அவர் பெரிதும் விரும்பினார்.

ஒருநாள் மாலை, "சந்திரா, பலமாதங்களாக ஒரு பெருங்கவலையுள் நான் வீழ்ந்து கிடக்கின்றேன். அதை நீ தான் நீக்கவேண்டும். எனக்கோ புத்திரனில்லை. உன்னையும் கேசவனையுமே என்னுடைய புத்திரர்களாக நான் பாவிக்கிறேன். கேசவன் உன்னை விடத் தீக்ஷண்ணியம் உள்ளவனாயினும் பிற்கால வாழ்வில் நீயே திகழுவாய். ஆகையால் உன்னையே சாரதாளுக்கு மணமகனாக வரித்துளேன்" என்று அவர் என்னிடம் கூறினார்.

நான் சுதந்திர முள்ளவன். என் தாய் தந்தையர் பரலோகமெய்தி விட்டனராகையால், மணம் புரிந்து கொள்ளப் பிறர் அநுமதி கேட்கவேண்டிய அவசியமே எனக்கில்லை. சாரதா தேவியைப் போன்ற நற்குணம், நற்கல்வி, மேனியழகு உடைய பெண்மணியை மனைவியாகப் பெறுவதை யார்தான் பெரும் பாக்கியமென எண்ணார்? என்னுடைய சந்தோஷத்திற்களவேயில்லை. அவள் அழகு கூறொணாதது. அவள் குரல் பக்ஷியின் இன்னிசைக் கீதம். அவளுக்கும் தத்துவ சாஸ்திரத்தில் பிரியம் உண்டு. பெண் பிரதிநிதித்துவம் முதலியவைகளைப் பற்றிப் பலதடவை ஆசை பொங்க என்னுடன் பேசியிருக்கிறாள். புரோபசர் ராகவன் தத்துவக் கனவு காண்பவர். இவளோ தத்துவத்தை வாழ்க்கையில் கொணர ஆசையுள்ளவள் சாரதாள் கூர்த்த மதியுள்ள கேசவனைத் தன் நட்பிற்குரியவனாக்கிக் கொண்டாள். இருந்தாலும் தன் தந்தையின் கட்டளையை ஒருநாளும் மீறி நடப்பவளல்லள். ஆனால் அவள் இஷ்டத்திற்கு விரோதமாய் நான் அவளை மணம் புரியேன்.

இப்பொழுது சாரதாளும் கேசவனும் அதிகமாய்ப் பேசுவதைக் காணோம். இச்செய்திகூட நான் எதிர்பார்த்த அளவிற்கு எனக்குச் சந்தோஷமளிக்கவில்லை. எதற்கும் சாரதாள் எண்ணத்தை யறியவேண்டும்.

மாலை வேளை. கேசவன் தத்துவத்தைப்பற்றி ஒரு சொற்பொழிவு நிகழ்த்தச் சென்றுவிட்டான். புரோபசர் ராகவன்தான் சபா நாயகர். சாரதாள் பங்களாவில் தனியாக இருந்தாள். நான் அவள் அருகில் சென்று உட்கார்ந்தேன். அவள் பேசலானாள்:

"பெரும் யோசனையில் இருப்பதாகத் தோன்றுகிறதே!"

"எல்லாம் உன்னைப்பற்றித் தான்."

"பிரசங்கம் கேட்கப் போகவில்லையா?"

என் கண்களில் தீப்பொறி பறக்கலாயிற்று. "இன்று மிக்க தலைவலி" என்று சத்தமாகச் சொன்னேன். கண்களிலிருந்து பல துளிகள் இதற்குள் விழுந்துவிட்டன. இதைக்கண்ட சாரதாளும் முத்துப்போன்ற நீர்த்துளிகளைச் சொட்டினாள். நான் கோழைமனமற்றவன். என்மனம் குரூரமுடையதுமல்ல. ஆனாலும் அவள் எனக்காக வருத்தப்படுவதைக் கண்ட என்னுள்ளம் சந்தோஷத்தாற் பூரித்தது. நான், கண்ணீர்ப் பெருக்கிடையே "சாரதா! நானே என்னுடைய துர்ப்பாக்கிய நிலைக்கு அழுகிறேன். உன் விசனத்திற்குக் காரணமென்ன?" என்றேன்.

"என் கண்ணீரின் இரகசியம் தங்களுக்குத் தெரியாது. ஏனெனில் அதை யறிந்து கொள்ளத் தாங்கள் முயற்சித்ததே கிடையாது. எத்தனை நாள் என்மனதை மிக்க கஷ்டத்துடன் அடைத்து வைத்திருக்கிறேன், எத்தனை நாள் தங்களைக் காணாது நான் அழுதிருக்கிறேன் என்பது தங்களுக்குத் தெரியுமா? தங்கள் குல உயர்ச்சியும் பெருஞ் சொத்தும் நமக்கிடையில் உயர்ந்த மலையாய் நிற்கின்றன. இப்பொழுது உயர்வு, தாழ்வு, நீங்கள் சொல்வது கிடையாது. இவ்வெண்ண மெல்லாம் கல்லூரியை விட்டு வெளியேறின பிறகு எத்தனை நாளைக்கு நிற்கும்? அப்பொழுது என்னை மணந்ததற்காக வருந்துவீர்கள். தங்களுக்குத் துன்பந்தர ஒருபோதும் இசையேன். நான் பணக்காரியல்ல. 11 மணிவரை வீடு வீடாய்ச் சென்று பையன்களுக்குப் பிரத்தியேக போதனை அளித்துவிட்டு என் தந்தையார் வந்து கொண்டிருந்தது எனக்கு இன்னும் நன்றாய் ஞாபகமிருக்கின்றது. விடாமுயற்சியினாலேயே இப்பொழுது என் தகப்பனார் சிறிது உன்னத நிலையை அடைந்துள்ளார். எங்கள் குலத்தைப்பற்றித் தாங்கள் அறியாத தொன்றுமில்லை." உனக்காக எத்தியாகமும் செய்யத் தயாராக விருக்கிறேன். வேறு சொல்ல முடியவில்லை."

"இவ்வார்த்தைகள் வேறு எப்பெண்ணையும் ஆநந்தக் கடலில் அமிழ்த்தலாம். மணம் இருவரைச் சார்ந்தது. இறக்கும்வரை ஒருவரை இன்னொருவருடன் இன்பத்திற்காக, வாழ்க்கை நலத்திற்காக, அகத்திற்காகப் பிணைப்பது. ஈசுவரன் சாட்சியாகச் சொல்லுகிறேன்: நான் யாரைக் கலியாணம் பண்ணிக்கொள்வேன் என்பது எனக்கே இதுவரை தெரியாது. இது மட்டும் உறுதி; எக்காலத்தும் நான் தங்களுக்குத் துன்பம் இழையேன்."

இதைக் கேட்கக் கேட்க என்னுள் புதிய உணர்ச்சி ஒன்று உண்டாயிற்று. மேலும் சாரதாள் இன்று புதிதாக விளங்கினாள்.

***

கேசவன் முதல் வகுப்பிலும் நான் இரண்டாம் வகுப்பிலுமாக எம். ஏ. பரீக்ஷையில் தேறினோம். நாகப்பூர் கல்லூரியில் அவன் உபாத்தியாயராகப் போய்விட்டான். நான் ஊருக்குச் சென்று என் வேலைகளைக் கவனிக்கலானேன். பிரியுமுன் ஒருவரை யொருவர் கட்டிக் கண்ணீர் விட்டோம். பொறாமை முதலியன முன்பே மறைந்து விட்டன.

எங்கள் ஜாதியில் நான்தான் முதன் முதல் எம். ஏ. பட்டம் பெற்றவன். இச்சமயம் ஓர் அங்கத்தினரிறந்து விட்டதால் சட்டசபையில் ஒருபதவி காலி ஏற்பட்டது. சட்டசபை நுழையப் பேரவா எனக்கில்லை. ஆனால் என்னைச் சூழ்ந்துள்ள ஜனங்கள் கட்டாயப்படுத்தி என்னையே அச்சட்டசபைக்குத் தேர்ந்தெடுத்து அனுப்பினர்.

பத்திரிகையில் என் பெயர் உலாவலாயிற்று. சட்டசபையில் நான் இறுக்கும் கேள்விகளைப் பலரும் புகழத் தலைப்பட்டனர். பல சமூகத்தலைவர்கள் என் நட்பை நாடினர். விவசாயிகளுக்காகச் சட்டசபையில் நான் சிறிது உழைத்தேன். நாங்கள் பலர் ஒன்று கூடித் "தேசீயக் கட்சி" ஒன்றை ஸ்தாபித்தோம்.

இவ்வாறு இரண்டு வருடங்கள் சென்றன. புரோ-ராகவனிடமிருந்து அடிக்கடி கடிதம் வருவதுண்டு. சாரதாளும் எனக்கு லிகித மெழுதுவாள். நாளாக ஆக அவளன்பும் பெருகிற்று. அவ்வின்பம்பொழி யன்பிற்குச் சான்று அவளருமைக் கடிதங்களே. என் செயல்களை மிகவும் புகழ்ந்து எழுதினுள். எல்லோருடைய புகழ்ச்சியினும் இவள் சொல்லும் சில மொழிகள் எனக்கூட்டும் ஆனந்தத்திற்கு அளவேயில்லை. நம்மனத்திற்கு உகந்தவர்கள் புகழ்ச்சியில் உண்மையிருக்கின்றது.

மூன்றாவது வருஷம்; வேனிற்காலம். புரோ - ராகவன் என்னைச் சந்தித்து மிக்க மனமகிழ்ச்சியுடன் திரும்பிச் சென்றார். அவர் போன மறுவாரமே சாரதாளிடமிருந்து ஒரு கடிதம் வந்தது. மகளுந் தந்தையுமாகப் பாதகண்டத்தைச் சுற்றிவர நிச்சயித்து விட்டார்களாம்.

அவர்கள் பிரயாணம் முடிந்து வீடு வந்தவுடன் எங்கள் மணச்சடங்கு நிறைவேறும். இதை உன்னி உன்னி என் உளம் பூரித்தது.

மார்ச்சுமாதம். புரோ - ராகவன் டெக்காணில் இருக்கிறார். திரும்பிவர இன்னுஞ் சில மாதங்களாகும்.

* * *

இதன் மத்தியில் மாகாணமெங்கும் கியாதிபெற்ற சோமசுந்தரர் நானிருக்கும் ஊருக்கு வந்தார். அவரைக்காண நான் சென்றிருந்தேன்! அவருடன் அவர் புத்திரி சுசீலாவு மிருந்தாள். அவள் முகம் காந்தமென என்னை இழுத்தது. பயப்பட்ட சிறு குழந்தையைப்போல் தன் தகப்பன் மறைவினின்று என்னைத் தன் அகன்ற கண்களால் எட்டிப் பார்த்தாள். ஆ! அக்கண்ணுள் மிதக்கும் கருணைதான் என்னே! தந்தையுடன்பேசிக் கொண்டிருந்தாலும் என் சிந்தை முழுதும் அவர் குமாரியிடத்தே நிலைத்துவிட்டது.

ஒன்பதரை மணிக்கு வீட்டிற்குத் திரும்பினேன். அன்று எனக்குத் தூக்கம் வரவில்லை. மறுநாள் அதிகாலையிலேயே எழுந்திருந்து ஒன்றுந் தோன்றாதவனுகப் பித்துப் பிடித்தவன்போல் வீட்டு வெளித் திண்ணையில் உட்கார்ந்திருந்தேன். சுமார் மணி பத்திருக்கும். தூரத்தில் ஒரு கோச்சு வண்டி தோன்றிற்று. அதனுள் ஓர் அழகிய பெண் வடிவம் துலங்கியது. என் மனதில் ஓரின்பந்துள்ளிற்று. மார்பு படபடவென்று அடித்துக் கொண்டது. வண்டி என் வாயிலை அணுகியது. சுசீலா கள்ளத்தனமறியாச் சிறு குழந்தையென மருண்ட பார்வையுடன் விளங்கினுள். என் மனம் என் வசத்திலில்லை. இச்சமயம் அவள் என்னைச் சிறிது ஏறெடுத்துப் பார்த்தாள். ஆ! அந்நெடு நோக்கு என்னெஞ்சை ஊடுருவிச் சென்று என்னை அடிமையாகச் செய்துவிட்டது.

ஆனல் காதலைப்பற்றிச் சுசீலாவுடன் நான் இதுவரை பேசவில்லை. சில சமயம் சாரதாள் ஞாபகம் வரும். ஆனல் அந்நினைவு கனவெனத் தோன்றி மறையும்.

இப்பொழுது அவனுக்குக் கடிதமெழுதுவதையும் நிறுத்திவிட்டேன். பாவம் சாரதா என்னென்ன எண்ணுவளோ? பல நாட்களுக்குப் பின் புரோராகவனுக்கு நான் கடிதமெழுதினேன்.

"க்ஷயரோகத்தால் பீடிக்கப்பட்டுள்ளேன். இந் நிலையில் மணம் செய்து கொள்ளல் உசிதமல்ல. ஆகையால் மண நாளைத் தள்ளி வைக்கவேண்டும்.

தங்கள் அன்பும் பணிவுமுள்ள
சந்திரன்."

நான்கு நாட்களில் சாரதாளிடமிருந்து பதில் கிடைத்தது. என்ன தியாகம்! எனக்காக எக்காரியமும் புரியத் தயாராகவிருக்கிறாள்! இப் பெருங் குணமணியையா நான்விடுவது? அவள் கடிதத்தைப் பன்முறை திருப்பித்திருப்பிப் படித்தேன்.

இந்நிலையில் சுசீலாவின் வண்டிச் சத்தங்கேட்டது. அவ்வளவுதான். அவளைக்காண வெளியிற் சென்றேன். சாரதாள் நினைவு மறைந்தது.

சாரதாள்

எல்லாம் தெரிந்து கொண்டும் சாவித்திரி சத்தியவானை விவாகஞ் செய்துகொள்ள வில்லையா? நான்மட்டும் என் பயப்பட வேண்டும்? கடமையினின்றும் ஏன் வழுவவேண்டும்? என் கணவனுக்காக விரதம் பூண்பேன்; தீர்த்த யாத்திரை செய்வேன்; தவமும் புரிவேன். இதுதான் என் சோதனைக் காலம். இச்சமயம் நான் வழுவலாகாது. நானும் சந்திரனும் விழுமிய அன்பால் விழுங்கப்படல் வேண்டும்.

இனி ஒரு விநாடியும் பொறுக்கேன். மூடவழக்கங்களைக் கடைப்பிடித்தொழுகல் தவறு. என் தந்தையும் அதே எண்ண முள்ளவர். சந்திரனும் வெறும் வழக்கத்தின் அடிமையல்ல. என் இப்பொழுதே சந்திரன் வசிக்கும் நந்நிலத்திற்குச் செல்லக்கூடாது? போய் அவருக்கு வேண்டிய பணிவிடைகள் செய்வேன். வீட்டு வேலைகள் முழுவதையும் நானே ஏற்றுக் கொள்வேன். அவருக்குச் சிறிதும், எதனுலும், எக்காரணத்தினுலும் சிரமம் தாக்கூடாது. என் பாட்டில் அவருக்கு எவ்வளவு விருப்பம்! அவர் சலிக்கும்போதெல்லாம் நான் பாட்டுப்பாடி அவரை மகிழ்விப்பேன். க்ஷயரோகத்தைப் பற்றி இன்றே படிக்க வேண்டும். வைத்திய முறைப்படி அவருக்கு உணவு முதலியன என் கையார, அன்புடன் கலந்து ஊட்டுவேன்.

***

அடையாளமே தெரியவில்லையே! மூன்று வருஷங்களுக்கு முன் இருந்த சுந்தரரூபம் பெரிதும் மாறுபட்டு விட்டதே. அடிக்கடி எண்ணக் கடலுள் ஆழ்ந்து விடுகின்றாரே! ஒரு சமயம் சட்டசபை வேலை யதிகத்தினலா? சட்டசபைக்குச் செல்பவர்களில் பெரும்பாலரும் பேரையும் அதிகாரத்தையுமே நாடுபவர்கள். ஆனல் என் மனத்திற்குகந்தவர் செய்கை எவ்வளவு பரோபகார முடையது!

இன்று அவருடம்பை நன்றாய்ப் பரீக்ஷை செய்து பார்த்தேன். க்ஷயம் இருப்பதாகத் தெரியவில்லையே. ஹா! கண்ணே! என் முடிவு உண்மையாகவிருக்க அருள்வாய். ஆனல் இவருக்கு வேறு என்ன கவலை?

***

எழுதவும் முடியவில்லை. மனம் குழம்பிவிட்டது. புத்தி சிதறிவிட்டது. என் வாழ்க்கையின் ஆசை நோக்கம் பாழ்பட்டு விட்டது. நெஞ்சகமே! தொல்விதியின் நீதியே! உலகில் நான் பெரும் பாக்கியவதி என்று எண்ணினேனே. என்றும் என்நெஞ்சை நீங்காதவரை ஒரு கணத்தில் அம் மான் விழிச் சுசீலா அடைந்து விட்டனளே. அவளைக் கண்டவுடன் எவ்வாறு முக மலர்ந்து புளகித மூறுகிறார்! கடவுளே! புருஷர்களுக்கு நீ ஹிருதயமளிக்க வில்லையா? வெளியழகில் மிகச் சுலபமாய் மயங்கிவிடுகின்றனரே. சுசீலா அவருக்கு அதிக வின்பந் தருவாளெனில் அவரை மணம் புரிய எனக்கு அதிகாரமேயில்லை. ஆனால் அவள் கர்வி; சிறுபக்ஷியென யோசனையின்றித் திரிபவள்.

சந்திரன் அவள் மீது ஆசை கொண்டுவிட்டார். அவர் மிக்க யோசனையுடையவர். ஆய்ந்தோய்ந்து பாராமல் ஒன்றைச் செய்யார். நல்லது கெட்டது நன்கறிந்தவர். நான் அவரை மணவாளனாக மனதார வரித்துவிட்டேன். அவருடன் ஒன்றி மனைவியாக வாழும் பாக்கியம் இருந்தாலும் இல்லாவிட்டாலும் அவர் நன்மையையே நான் நாடவேண்டும். அவர் சந்தோஷத்திற்காக உயிரையும் சமர்ப்பிக்கத் தயாராக விருக்கவேண்டும். யாரை என்னுடைய சொந்தாகப் பாவித்தேனோ, யாருக்காக இவ்வளவு நாள் இவ்வுடம்பை யோம்பி வந்தேனோ, எவருடைய பாதத்தில் என்னையே அர்ப்பணம் செய்ய எண்ணியிருந்தேனோ, யார் என் மனக்கோயிலில் சுவாமி நிலை படைத்திருந்தாரோ, யார் நினைவிலும் கனவிலும் என் சித்தத்தை நீங்காதிருந்தாரோ, அவர் என்னை விட்டுப் பிரிகிறாராம்! ஈசா! ஈசா! எனக்குச் சிறிது தைரியங்கொடு. என்ன! என் முன்னிருக்கும் காகிதம் பறக்கிறதுபோற் றோன்றுகிறதே!

என் தந்தை என்ன நினைக்கிறாரோ? அவர் சந்திரனைக் கட்டாயப் படுத்துவாரா? சந்திரன் சொன்ன சொல் காக்குந் தூயர். என் தந்தைக்காக என் கணவனாகச் சம்மதிப்பாரென்பதில் ஐயமில்லை. ஆனால் அவரிஷ்டத்திற்கு விரோதமாக நான் அவர் மனைவியாக மாட்டேன். இது உறுதி.

## சந்திரன்

ஒரே நோக்கில் சாரதாள் என் மனதை யிழுத்தாள். ஒரே நோக்கில் சுசீலாவும் என்னை யடிமை யாக்கினாள். சாரதாள் முகத்தில் பொறுமை, கருணை, நிராசை, வேதனை முதலியன தோன்றுகின்றன. தன்னை அவள் என்னிஷ்டத்திற்குப் பலி கொடுத்துவிட்டாள். அவள் என் நன்மைக்காக எதுவும் செய்யத் துணிந்தவள். ஆனால் என்னிடமிருந்து அவள் ஒன்றையும் எதிர் பார்க்கவில்லை. கூடையுள் மூடிவைத்தாலும் பூமணம் வெளியில் கமிழ்கின்றது. அதுபோல் உள்ளெழும் தியாக உணர்ச்சி அவள் முகத்தின்கண் விளங்குகின்றது. அவள் உண்மை ரூபத்தை இப்பொழுதுதான் காண்கிறேன். பலனிற் பற்றில்லாமல் கடமை புரியும் பெண் ரத்தினம் அவள்தான். முதன் முதலில் சாரதாளை அவள் கவிதை மிதக்கும் கண்களுக்கும், மதுர வார்த்தைகளுக்கும் விரும்பினேன். இப்பொழுதோ! அவள் தியாகத்திற்காக எண்ணற்கரிய அன்பிற்காக அவளைக் காதலிக்கிறேன். வேறொருத்தியா யிருந்தால் சுசீலாவுடன் சண்டை யிட்டிருப்பாள். ஆனால் சாரதாள் அவளைத் தன் தங்கையென எண்ணி நேசிக்கிறாள்.

புரோ-ராகவன் மனம் மாறிவிட்டது. என்மீது மிக்க வருத்தங்கொண்டார். என்னை விட்டகல அவர் அவசரப்பட்டார். சாரதாள் போகுமுன்

என்னிடம் விடைபெற வந்தாள். வெண்தூசணிந்த அவள் அப்பொழுது சுவாமிக்குச் சார்றவேண்டிய மாலையென விளங்கினாள். புன்னகையும் வருத்தமும் அவள் முகத்திற் கலந்து தோன்றின.

"கடிதமாவது எழுதவேண்டும். இவ்வரங்கேட்க எனக்குச் சுதந்திரமுண்டு என்றெண்ணுகிறேன்."

"ஆம்; கண்டிப்பாய்."

"இதுவே நாம் கடைசியாகச் சந்திப்பது. யானெங்கு போவேனோ, என்ன செய்வேனோ, மறுபடியும் தங்களைக் காணமுடியுமோ, முடியாதோ, ஒன்றுமறியேன். என்னை அறவே மறத்தல் கூடாது. தாங்கள் என்னை நினைக்கிறீர்கள் என்ற எண்ணம் எனக்குப் பெரும் ஆறுதலளிக்கும். தெரிந்தோ, தெரியாமலோ, நான் தங்களுக்குத் துன்பந் தந்திருந்தால் தயவு செய்து மன்னிக்கவும்"

அவள் கண்களில் நீர்த்துளி உருண்டது. சீக்கிரம் வெளியே போக ஆசைப்பட்டாள். அவள் கண்களைப் பார்த்தேன். அதில் விளங்கும் துயர் என் மனதைத் தைத்தது. அவ்வளவுதான். என்மனதை மீண்டுமொரு முறை ஜயித்துவிட்டாள். தாவி யெழுந்திருந்து அவளிருகைகளையும் பற்றி, குழறும் மொழிகளில், "இல்லை. சாரதா, இனி நாமிருவரும் ஒன்றே. நீ என்னை ஒரு போதும் பிரியவேண்டுவதில்லை" என்றேன்.

சிறிது நேரத்திற்குள் சுசீலாவிடமிருந்து ஒரு கடிதம் வந்தது.

"அன்பார்ந்த திரு. சந்திரா !

நாளைக்கு நாங்கள் இங்கிருந்து புறப்படுவோம். என் கடமை எது என்பதை நான் முடிவு செய்துவிட்டேன். சாரதாளின் கணவனை அபகரிக்க எனக்கிஷ்டமில்லை. இச்சமாச்சாரம் முந்தியே தெரிந்திருந்தால் நம்முள் சிறிதும் நட்பு உண்டாகவே இடந் தந்திருக்கமாட்டேன். போனது போய்விட்டது. எனக்கு ஒரு வரந்தரவேண்டும். அதாவது, சாரதாளைத் தங்கள் கையினின்றும் விடாதீர்கள். அவள் பெண்களில் ரத்தினம். நான் அவளைவிடச் சிறிது மேனி யழகுள்ளவள்தான். ஆனால் அவளிடத்திற் பொலியும் நற்குணங்கள் பல. சாரதா தங்கள் வாழ்வை உன்னத நிலைக்குக் கொண்டுபோகுந் திறனுடையாள்.

இனி நாம் ஒருவரை யொருவர் பார்த்தலுங்கூடாது. என்னை மன்னிப்பீர்களாக.

சுசீலா."

இக்கடிதத்தை சாரதா படித்தவுடன் சுசீலாவைப் பார்க்க ஆசை கொண்டாள்.

நான் புரோ - ராகவனிடஞ் சென்றேன். வாடின முகத்துடன் உட்கார்ந்திருந்த அவர் பாதத்திற் பணிந்து இவ்வளவு நாளாய் என்னைத் தாங்கள் மகனாகப்பாவித்து வந்தீர்கள். இனி என்னை மருமகனாகக் கொள்ள வேண்டும் என்றேன்.

முதலில் அதிசயத்தினால் அவர் விழித்தார். பிறகு நல்ல மலர்ச்சிரிப்புடன் "இதுவே என்பேராசை. நீயும் சாரதாளும் ஒன்றி நீடூழி காலம் இன்பமனுபவிப்பீர்களாக" என்றார்.

பித்தன்.

# ஆகாரம்.

பண்டித K. V. தேவராஜ சாஸ்திரிகள்.

1. நாம் உண்ணும் ஆகாரம் சாத்விகம், ராஜஸம், தாமஸம், என்று மூவகையாம். ஆயுளையும், மன உறுதியையும், தேக பலத்தையும், சுகத்தையும் விளைவிக்கும் மனதிற்கு இன்பகரமான ருசியுள்ள ஆகாரத்திற்கு சாத்விக ஆகாரமென்று பெயர். துக்கத்தையும், வியாதியையும், விளைவிக்கும் கசப்பாயும், உவர்ப்பாயும், உறப்பாயும் இருக்கும் ஆகாரத்திற்கு ராஜஸமென்று பெயர். பாகம் செய்து ஒரு ஜாமத்திற்குப் பிறகு ஆறி ருசியில்லாத அசுத்தமான ஆகாரத்திற்குத் தாமஸமென்று பெயர்.

2. மறுபடியும் ஆகாரம் ஜாதிதுஷ்டம் (இயற்கைக் குற்றமுடையது) ஆச்ரய துஷ்டம் (செயற்கைக் குற்றமுடையது) என இருவகைப்படும். இவ்விருவகை ஆகாரத்தையும் நாம் உண்ணக் கூடாது. வெங்காயம், பூண்டு முள்ளங்கி, கேளான், சுரக்காய், உருளைக்கிழங்கு, அட்டுப்பு, முருங்கை, இவை யெல்லாம் ஜாதி துஷ்டங்களாகும். தாமிரப் பாத்திரத்தில் வைத்த பாலும், தோல் ஸஞ்சியில் வைத்த பாலும், ஆச்ரய துஷ்டமாகும். ஜாதி துஷ்டமான பதார்த்தங்களையும் ஆச்ரய துஷ்டமான பதார்த்தங்களையும் ராஜஸ தாமஸ பதார்த்தங்களையும் ஒழித்து, மற்றவைகளைச் சேர்த்து போஜனம் செய்யவேண்டும். ஒருவன் ஒருநாள் இருவேளைதான் போஜனம் செய்யக் கூடும். இவ்விரு போஜனங்களுக் கிடையில் சிற்றுண்டிகளைத் தின்பது, ஜாடராக்னியின் பலத்தைக் குறைத்து, வியாதியை விளைவிக்கும். அதிகாலையிலும் நடுநிசியிலும் போஜனம் செய்யக்கூடாது.

3. போஜனம் செய்யப் போகும்பொழுது கால்களைச் சுத்தம் செய்து முகத்தைக் கழுவி ஆவின் சாணியால் மெழுகி சுத்தம் செய்த பூமியிலிட்ட ஆசனத்திலமர்ந்து போஜனம் செய்யவேண்டும். போஜனம் செய்வதற்கு முன் இரண்டு தடவை ஆசமனம் செய்து அன்னத்தைக் கண்டு சந்தோஷமாக வணங்கித் தண்ணீரால் அன்னத்தைச் சுற்றி பிராணாஹுதி செய்து யமன், சித்ரகுப்தன், முதலியவருக்கு பூமியில் பலிவைத்து அன்னத்தை உண்ண வேண்டும். உண்ணுமுன் காகத்திற்குப் பலியிடவேண்டும்.

4. கிரஹஸ்தன் இருபது பலத்திற் கதிகமான, வெங்கலப் பாத்திரத்திலாவது, வெள்ளி அல்லது தங்கத்தால் செய்த பாத்திரத்திலாவது போஜனம் செய்யவேண்டும். உடைந்த பாத்திரங்களிலும் இரும்பு, செம்பு, ஈயம், தகரம், மண் முதலியவற்றால் செய்த பாத்திரங்களிலும் போஜனம் செய்வது வியாதியை விளைவிக்கும். கிரஹஸ்தன், தாமரையிலையிலும், பொரஸ இலை

யிலும், ஆலிலையிலும், அரசிலையிலும், வாழைப்பட்டையிலும் போஜனம் செய்யக்கூடாது.

5. எப்பொழுதும் கிழக்கு முகமாக உட்கார்ந்து போஜனம் செய்ய வேண்டும். ஆனால் காம்ய போஜனத்தில் கிழக்குமுகமாக போஜனம் செய்தால் ஆயுளும், தெற்குமுகமாக போஜனம் செய்தால் கீர்த்தியும், மேற்குமுகமாக போஜனம் செய்தால் ஐஸ்வர்யமும் அபிவிருத்தி யாகும்.

6. பலகையால் செய்த ஒரு அங்குலம் உயரமுள்ள ஆஸனத்திலுட்கார்ந்து, போஜனம் செய்யவேண்டும். தர்ப்பாஸனத்திலும், கம்பளாஸனத்திலும், மான், புலி, சிங்கம் முதலியவற்றின் தோலின் மேலும் உட்கார்ந்து கொண்டு போஜனம் செய்யக் கூடாது. உத்தரீயத்தைத் தலையில் கட்டிக்கொண்டும், நனைந்த வஸ்திரத்தைத் தரித்துக்கொண்டும், ஒரே வஸ்திரத்தைத் தரித்துக்கொண்டும், வஸ்திர மில்லாமலும், தலையை அவிழ்த்துக் கொண்டும், இடது கையால் காலை ஸ்பரிசித்துக்கொண்டும், படுக்கையில் உட்கார்ந்து கொண்டும், பாதரக்ஷைகளைப் போட்டுக்கொண்டும், கால்களை நீட்டிக்கொண்டும், தேவாலயத்திலும், தனது வீட்டின் ஒரு மூலையிலும், பாகசாலையிலும் அசுத்தமான இடத்திலும், வீதியில் நடந்துகொண்டும், யானை, குதிரை, வண்டி, முதலிய வாகனங்களில் ஏறிக்கொண்டும், பற்பல கதைகளைப் பேசிக்கொண்டும், போஜனம் செய்யக் கூடாது. போஜனம் செய்யும் பொழுது மௌனமாகவே இருக்க வேண்டும். ஆனால், ஒவ்வொரு கவளம் உண்ணும் பொழுதும் "கோவிந்த, கோவிந்த, கோவிந்த" என்று பகவன் நாமத்தை மாத்திரம் உச்சரிக்கலாம். தனது மனைவி, சகோதரி, தாயார், இவர்களுக் கெதிரில் போஜனம் செய்யக்கூடாது. ஆனால் பிரயாணம் செய்யும்பொழுது, வழியில் அவர்களுக் கெதிரில் போஜனம் செய்யலாம். பந்தியில் போஜனம் செய்யும்பொழுது, மற்றவர்களைவிட விரைவாக உண்டு, எழுந்திருக்கக் கூடாது. பந்தியில் முதல் எழுந்திருப்பவனும், பந்தி வஞ்சனை செய்பவனும், மஹா பாதகர்களாகின்றனர்.

7. கையால் இடப்பட்ட பக்குவமான அன்னம், முதலிய பதார்த்தங்களைப் புசிக்கக்கூடாது. பக்குவமான பதார்த்தங்களைச் சிறு கரண்டியாலிட வேண்டும். எண்ணெய், நெய், முதலியவற்றில் பக்குவமான பதார்த்தங்களையும், அக்னியில் பக்குவமாகாத பதார்த்தங்களையும் கையால் இடலாம். இரும்புப் பாத்திரத்தில் வைத்த அன்னத்தையும், இரும்புக் கரண்டியாலிட்ட அன்னத்தையும், புசிக்கக்கூடாது. ஒரு கவளத்தில், பாதியைப் புசித்து, மிகுதியை வைக்கவும் கூடாது. ஒருவன் அருந்தி மிகுதியான தண்ணீரை அருந்தவும் கூடாது. எண்ணெய், நெய், உப்பு, முதலியவற்றைக் கையில் வாங்கி புசிக்கக்கூடாது. போஜனம் செய்யும்பொழுது கையை உதரக்கூடாது. ஸ்திரீகள் போஜனம் செய்த பிறகு மிகுதியான அன்னத்தை

போஜனம் செய்யக்கூடாது. காகம், நாய், பசு, பூனை முதலிய பிராணிகள் தொட்ட அன்னத்தைப் புசிக்கக்கூடாது.

8. நாம் உண்ணு மாகாரத்தில் நகமாவது, ரோமமாவது, இருந்தால், அதை எடுத்துவிட்டு நெய்யைத்தொட்டு மறுபடியும் போஜனம் செய்ய வேண்டும். எப்பொழுதும் மிதமாகவே போஜனம் செய்யவேண்டும். தனது வயிற்றில் இரண்டு பாகம் அன்னம் முதலியவற்றாலும், ஒரு பாகம் தண்ணீராலும் நிரப்பி மற்றொரு பாகத்தை வாயுவின் சஞ்சாரத்திற்காக விட்டுவிட வேண்டும். ஆசாரமில்லாத பிராம்மணனுடைய அன்னத்தையும், ராஜாவின் அன்னத்தையும், போஜனம் செய்யக்கூடாது. பெரிய சங்கங்களில் இடும் அன்னத்தையும், காசுக்காக ஹோட்டல்களில் வைத்திருக்கும் அன்னத்தையும், பசுபந்தம் முதலிய யாகங்களிலிடும் அன்னத்தையும், சீமந்தான்னத்தையும், போஜனம் செய்யக்கூடாது. இவ்விதம் ஆகாரம் தேகத்தில் சேர்ந்து, தேக பலத்தையும், சூக்ஷ்ம புத்தியையும் விளைவிக்கும்.

9. நாம் உண்ணுமாகாரம், ஜாடராக்னியால், ஸ்தூலம், மத்திமம், அணு, என்று மூன்று விதமாகப் பிரிக்கப்படுகிறது. அதில், ஸ்தூலமான பாகம் அமேத்தியமாகவும், மத்திம பாகம், மாம்சமாகவும், அணு, மனமாகவும், மாறுகிறது. நாம் அருந்தும் தண்ணீரும், மூன்றாகப் பிரிக்கப்பட்டு, முறையே, மூத்திரமாகவும், இரத்தமாகவும், உயிராகவும் மாறுகிறது. நாம் புசிக்கும், தேஜஸ்ஸின் அம்சமான, எண்ணெய், நெய் முதலிய பதார்த்தங்களும், மூன்றாகப் பிரிக்கப்பட்டு, எலும்பாகவும், கொழுப்பாகவும், வார்த்தையாகவும், மாறுகின்றன.

இப்படி போஜன முறைகளை யறிந்து, விலக்கவேண்டியவைகளை விலக்கி, சேர்க்க வேண்டியவைகளைச் சேர்த்து, மிதமாக போஜனம் செய்யத் தேக பலமும், மன உறுதியும், ஜெபம், த்யானம், யோகம், முதலியவற்றைச் செய்ய அனுகூலமான ஊக்கமும் உண்டாகும்.

## குழந்தை வசியம்.

சில குழந்தைகள் புதிய ஆசாமிகள் அழைத்தால் விரைந்து தாவிவரும்; சில முகத்தைத் திருப்பிக்கொள்ளும்; சில வேற்று முகத்தைப் பார்த்ததும் விம்மி விம்மி யழ வாரம்பித்துவிடும். ஆனால் எந்தக் குழந்தையும் ஒரு மிட்டாயைக் காட்டி "இந்தா! கண்ணேவா!" என்றழைத்தால் உடனே வேகமாக யாரிடத்திலும் தாவிச் செல்லும். இதனாலேயே பெரியோர்கள் குழந்தையுள்ள வீட்டிற்கு வெறுங் கையோடு செல்லலாகாது என்று கூறுவது வழக்கம். திருடர்கள்கூட இந்த மிட்டாயாகிய குழந்தை வசியத்தைத் தெரிந்து வைத்துக்கொண்டு எத்தனையோ குழந்தைகளை ஏமாற்றிவிடுகிறார்கள்.

# ஆனந்த சந்திரோதயம்

S. V. V.

"மழைவிட்டும் தூவானம் விடவில்லை" என்பது ஒரு பழமொழி. இவ்வுலகின்கண் மானிடராய்ப்பிறந்தா ரனைவரையும் புண்ய பாபச் செயல்களிற் றூண்டுவது ஆசையொன்றேயாகும். அவ்வாசை மண்ணாசை பெண்ணாசை பொன்னாசை யென மூன்றுவகைப்படும். இம்மூன்றும் ஓர் அளவில் இல்லறத்திற்குப் பொருந்தியவைகள். ஆனால் இவற்றை அளவு கடந்து அறவழி மாறி ஈட்டமுறப்படுவதால் பாவம் சம்பவிக்கின்றது. பாவம் என்பது துன்பமே. அறம்பொருள் இன்பம் வீடாகும் நான்கினுள் முதலதையும் கடையதையும் துறவிகள் ஏற்கின்றனர். அவர்களால் வெறுக்கப்படுவன பொருளும் விஷய சுகமுமேயாம். கலாசாலையிற் கற்கும் மாணவர்களுள் சிலர் அறிவு வன்மை பெற்றவராயும் சிலர் நடுத்தரமான புத்தியுள்ளவராயும் பலர் மூடர்களாயும் இருக்கின்றனர். அதுபோன்றே உலகமென்னும் இக்கலாசாலையில் வாழ்வென்ற வகுப்பில் வாசிக்கும் மாணவர்களாகிய மக்களும் முதல் இடை கடையென மூவகைப்படுவர். முதல் வகையினர் இறைவனது சரணாரவிந்தப் பிராப்தியி லன்றி வேறெதிலும் மனதைப்பற்றவிடாதடக்கி ஏகாந்தமான வனாந்தரங்களிலே தியானபரராய்க் காலங்கழித்து முத்தி யடைவர். இவர்கள் துறவிகள். இடையானவர் இல்லற வாழ்வில் அந்நெறிப்படி யொழுகி, 'தென் புலத்தார் தெய்வம் விருந்தொக்க லொனென்றாங் கைம்புலத்தாறோம்பி' வாழ்ந்து பகவானது கிருபைக்குப் பாத்திரராவார். கடைப்பட்டவர் இல்லறத்தை யேற்றும் துறவறம் பூண்டும் ஆசைகளிற் சிலவற்றை முழுதும் வென்றும் சிலவற்றை அரைகுறையாக விட்டும் பின்னுஞ் சிலவற்றை விடாமலும் ஊசலாடி உழல்வர். துறவிகளோ கிரியாம்சத்தில் விழிமடவார் உறவு விட்டும், வெகுளி விட்டும், உலக வாழ்வில் பிழை விட்டும், ஆசையை மட்டும் விடவியலாது மழை விட்டும் தூவானம் விட்டபாடின்றி வருந்துவர்.

***

'நாய்காணிற் கற்காணுவாறு' என்பதோர் வழக்கு. நாலடியாரில் இப்பழமொழி வழங்கப்பட்டதன் விஷயம் வேறு. ஈண்டு இதைக்கொண்டே இன்னொரு விஷயத்தை விவரிப்போம். 'நாயைக்கண்டால் கல்லைக்காணோம்; கல்லைக்கண்டால் நாயைக்காணோம்' என்று நாம் சாதாரணமாகச் சொல்வதுண்டு. இதை வேதாந்திகள் வழங்குவது மிக்க அழகா யிருக்கும். கல்லால் ஒரு நாயின் உருவம் அமைந்திருக்கின்றது. அதை நாயென்று கருதுங்கால் நாயின் உருவம் மட்டும் நம் மனதிற்கு வருமே யன்றி கல்லென்ற நினைவு வராது; கல்லென்று கருதும்போது, கருங்கல் செங்கல் வெண்கல் என்ற கல்

லப் பற்றிய விஷயங்கள் நம் நினைவுக்கு வருமே யல்லாது நாயென்ற ரூபம் தோன்றாது. இக்கருத்தை

'பொன்னை மறைத்தது பொன்னணி பூஷணம்
பொன்னின் மறைந்தது பொன்னணி பூஷணம்
தன்னை மறைத்தது தன்கர ணங்களாம்
தன்னின் மறைந்தது தன்கர ணங்களே'

என்னும் வேதாந்தப் பாடல் வலி யுறுத்தும்.

"பொன்னாலாகிய பூஷணத்தை ஆபரண மென்னும் நினைவோடு பார்க்கும்பொழுது பொன்னென்று தோன்றாது ஆபரணமாகவே காணப்படுதல் போல, கரண வியாபார மேலிட்டால் ஆன்மா தோன்றாது. பொன் என்னும் எண்ணத்துடன் பார்க்குமளவில் ஆபரணம் தோன்றாது பொன்னே காணப்படும். ஆன்மா தன் நிஜரூபத்தை யுணர்ந்த பின்னர் கரண வியாபாரம் ஒடுங்கும்" என்று திருஷ்டாந்த பூர்வமாய் விளக்கி யுள்ளார். கரணங்களின் வியாபாரம் மறையுங்கால் இறைவனருள் சுரக்கின்றது. பக்தன் ஆத்மாவின் தன்மை இதுவென உணர்ந்து 'அரும்பொனே! மணியே!' என்று துதிக்கின்றான்.

***

"பாபிகளே பாக்யவான்கள்" என்பது பைபிள் வாக்கியம். சுமார் ஐம்பது அறுபது ஆண்டுகளுக்கு முன்னர் வடநாட்டில் பாவ்ஹாரி பாபா என்ற ஓர் மகான் இருந்தார். சில விஷயங்களில் ஸ்ரீராம கிருஷ்ணரை விடச் சிறந்த மகிமை இப்பெரியாரிடம் இருந்ததென்றும் ஸ்ரீராம கிருஷ்ணரும் பாவ்ஹாரி பாபாவும் ஒரே நாணயத்தின் முன்பின் புறங்கள் என்றும் ஸ்ரீமத் விவேகானந்த சுவாமிகள் தமது பிரசங்கங்களில் அடிக்கடி கூறுவதுண்டு. பாவ்ஹாரி பாபா கங்கா தீரத்தில் ஓர் ஏகாந்த ஸ்தலத்திலுள்ள குடிசையில் தனி வாழ் வியற்றிவந்தார். நிற்க, பிறந்தது முதல் திருட்டுத் தொழிலி லன்றி வேறெதிலும் பழக்கமில்லாத ஒருவன் ஒருநாள் திருடுவதற்கு வேறெவ்விடமுங் காணாதாய், இரவு வெகு நேரமான பின்னர் பாவ்ஹாரி பாபாவின் குடிசையருகே வந்து நின்றுகொண்டிருந்தான். நல்ல நிலவு காய்ந்துகொண்டிருந்தது. அப்பொழுது அவனுக்கொரு யோசனை உண்டாயிற்று. "இந்தச் சந்நியாசி வெகு காலமாக இங்கிருக்கிறான்; துறவிகள் பலர் ரகசியமாகப் பொருள் சேர்த்து வைத்துக்கொண்டு வெளிக்கு வேஷம் போடுவதுண்டு என்று சொல்லுகிறார்களே. அப்படியே இல்லாவிட்டாலும் ஏதேனும் அற்பப் பொருளாவது நமக்குக் கிடைக்காமற் போகுமா? பார்ப்போம் பகவான் இருக்கிறார்" என்று எண்ணி, பாபா சமாதியில் வீற்றிருக்கும் நேரம் பார்த்து உள்ளே நுழைந்தான். அங்கே இரண்டொரு ஓடுகளும் ஒரு பித்தளை டம்ளரும் இருந்தன. கிடைத்தது லாபம் என்று அந்த டம்ளரை எடுத்தான். அது கைதவறிக் கீழே விழுந்தது. பாபா சமாதி கலைந்து 'நாராயணா' என்று சொல்லிக்கொண்டே எழுந்தார். திருடன் விழுந்து ஓடினான். பாபா அவன் பின்னால் 'பிரபோ நில்லும்! சர்வேஸ்வரா நில்லும்' என்று சொல்லிக்கொண்டே ஓடினார். திருடனோ, "கிழவா! உன்னைப்போல் எத்தனையோ பேரை நான் பார்த்திருக்கிறேன். நீ என்னை ஏமாற்ற முடியுமா?' என்று சொல்லிக்கொண்டே ஓட, பாபா பின்னே 'பிரபோ! வந்த திருக்கூட்டமதில் யானொருவ னல்லனோ? ஏழையேன்மீது கிருபை கொள்ளும்; உம்மைவிடேன்' என்று பிரலாபித்துக் கொண்டே சென்றார். இவர் ஓட அவன் ஓட ஒருமைல் தூரம் சென்றதும்

ஒரு வேர் தடுக்கிவிட அக்கள்வன் கீழே விழுந்தான். பாவ்காரி பாபா அவனைக் கிட்டி அவன் கால்களை விடாமற்பிடித்துக்கொண்டு "ஹே! சோர நாராயணா! அன்று ஆயர்பாடியில் வெண்ணெய் திருடவும் ஆய்ச்சியர் பின்னோடிவந்து மத்தாலடித்து உன்னோடு லீலை புரியவுமிருந்த அந்தப் பரமானந்த பக்தாம்ருதத்தை இன்று யானடைந்தேன். பிரபோ! உம்மை நான் விடேன். எனது சிறு குடிலுக்கு நீர் எழுந்தருள வேண்டும். தங்களுக்கு ஆங்குள்ள பொருள்களுள் என்னென்ன வேண்டுமோ அவற்றைத் திரிகரண சுத்தியாய் சமர்ப்பிக்கிறேன்' என்று தோத்திரிப்பாராயினர். கள்ளன் எழுந்தான். அவன் உள்ளமோ பின்னும் விரைந்தெழுந்தது. அவன் கண்களினின்றும் ஆனந்தபாஷ்பம் பெருகிற்று பாபாவின் ஸ்பரிச மாத்திரத்தால் அவன் பரம பவித்திரனானான். அவரது சொற்கள் அவனுக்கு மோக்ஷ சாம்பிராஜ்யத்தை நல்கும் தன்மையதாயின. அவரை அவன் மும்முறை வலம் வந்து வணங்கினான். 'ஹா! என்ன பாபத் தொழிலில் நாம் உழன்றோம்' என்று பரிபூரணமாக மெய்மறந்தெண்ணினான்; அக்கணமே அவன் உள்ளத்தின்கண் நிலைத்து நின்று கரணங்களைத் தூண்டிய மாயை பறந்தது; விழுந்தான் பாபாவின் இணையடிகளில்; 'ஹே! சாது என்னைக் காக்கவேண்டும். அறியாமையால் அடியேன் தவறிழைத்தேன். எனக்கு உய்யும் வழியை உணர்த்தி யருளல் வேண்டும்' என்றான். பாபா 'சோர நாராயணா! என்னைப்போல் நீயும் செய்' என்றருளினார். அக்கணம் முதல் அவனும் ஓர் பாவ்ஹாரி பாபாவாயினான். க்ஷேத்திர யாத்திரை செய்து பிச்சையேற்றுண்டு காலங்கழித்தான். இப்படி பாபிகள் மகான்களுடைய ஸ்பரிச மாத்திரத்தில் பரிபக்குவமடைகிறார்கள். திருமங்கையாழ்வார் சரித்திரமும் இதனைத் தெளிவாகக்கூறும். 'பாவத்தின் எல்லை இன்பம். சம்சாரமென்னும் சமுத்திரத்தைக் கடந்தால் மோக்ஷமென்னும் கரையில் ஏறலாம்' என்று வேதாந்த நூல்கள் கூறும் உண்மையும் இதுவே.

***

'பஞ்சேந்திரியங்கள்' இவை மெய் வாய் கண் மூக்கு செவி என்பன. இவற்றை அடக்கினவர் எய்துவது இன்பம். அஃதாவது வீடு. இவற்றின் வழி மனதைச் செலுத்தி வாழ்பவர் அடைவது துன்பம்; அதுவே நரகம். புராணங்கள் மோக்ஷத்தையும் நரகத்தையும் பற்பலவாறு வர்ணிக்கின்றன. இதைக்கண்டு நவீனர்கள் புராணம் 'பொய்—ஆபாசம்' என்று பிரசங்கஞ் செய்ய ஆரம்பித்து விடுகின்றனர். இந்த மோக்ஷம்-நரகம் என்பவற்றைப் புராணங்கள் விவரிப்பதன் கருத்து வேறு. உதாரணமாக முதல் வகுப்பில் கற்கும் ஒரு மாணவனிடம் கல்லாடத்தில் ஒரு பாட்டை எடுத்துக்கொடுத்து பொருள் கூறு என்றால் அவனாலியலாதல்லவா? அது போல சாமான்ய பாமரஜனங்களுக்கு பஞ்சேந்திரிய சேட்டைகளின் விவரத்தையும், அவற்றை அடக்கும் முறைகளைச் சொல்லும் ஸ்ருதி ஸ்மிருதிப்பிரமாணமான ஆதாரங்களையும் எடுத்தோதினால் அவற்றை கிரகிக்கக்கூடிய சக்தி அவர்களுக்கு இராது. ஆனால் சாமான்ய ஜனங்களுக்கும் உய்யும் வழியைப் புகட்ட வேண்டுமென்பது அவசியம். அதற்காக அவர்களுக்கு பாவம்-நரகம், புண்யம்-மோக்ஷம்-என்று கதாரூபமாகக் கற்பித்தனர் பெரியோர். 'நரகம் என்பது நூறு யோஜனை தூரத்திற்கு ஒரே பவ்வீயாக நிறைந்திருக்கும் ஓர் குழி. பாவிகள் அதில் அநேக காலம் அழுந்தித் தத்தளித்துக்கொண்டிருக்க வேண்டும்' என்று கூறினால் பாமரனுக்கு பயமுண்டாகிறது. அதனால் அவன் பாவத்தொழிலைச் செய்ய அஞ்சுகிறான். குழந்தைகளைப் பாதுகாக்க

வேண்டுவது பெற்றோர் கடன். அதற்காக அவர்கள் 'அப்பா! அங்கு செல்லாதே பூச்சாண்டி யிருக்கும்' என்று கூறிவைக்கிறார்கள். பூச்சாண்டி என்பது உண்மையில் இல்லையானாலும் அந்த வார்த்தையானது குழந்தையைக் காப்பாற்றுகின்றது. அதுபோலத்தான் மேற்கூறிய விஷயமும். அதனால் அந்தக் குழந்தை 'பூச்சாண்டி' என்று சொல்லிக் கொண்டே பயக் குறி காட்டுகின்றது. அதுபோல் எள்ளளவும் படிப்பில்லாத ஞான சூன்யனான ஒருவன்கூட "மாட்டை அடிக்காதே! பாவம்" என்கிறான்; 'பசுவிற்கு தண்ணீர் கொடு—புண்யம்' என்று கூறுகின்றான். இந்த உணர்ச்சி அவனுக்கு எப்படி வந்தது? அவன் எந்த புத்தகத்தைப் படித்திருக்கிறான்? இதுதான் நமது ஆன்றோருடைய போதனா சக்தியின் பெருமை. குழந்தை வயதடைந்து பெரியவனான பின்னர், அவன் பூச்சாண்டி - என்பது பொய் என்று தானாகவே அறிந்து கொள்ளுகிறான். ஆனாலும் அந்த முறையிலுள்ள சூக்ஷமத்தை அவன் அறிந்து கொண்டு தன்னுடைய குழந்தையையும் அதே வார்த்தையைக் கொண்டே பயமுறுத்துகின்றான். அங்ஙனம், கற்றவர்கள் பஞ்சேந்திரியங்களின் சேட்டை கொடிதென்பதையும் அவற்றால் அடைய நேரும் வாதனைகளின்னவென்பதையும் தாம் கண்ட கழி நுட்பத்தாலறிந்து கொள்ளுகிறார்கள். காமியாகிய ஒருவன் வேசையை விரும்பி யடைந்து பிணியுற்று மருத்துவனால் கத்திகொண்டு அறுக்கப்பட்டு, சீழும் இரத்தமும் வெளிப்பட ஐயோ! அப்பா! என்று அலறுங்கால் அதைவிடப் பிரத்யக்ஷ நரகம் வேறுண்டா? முக்குறும்புகளில் முதலாகிய காமத்தின் கேட்டால் இவன் அடைந்த இவ்வாதனையைத் தான் 'மலக்குழி' என்ற பெயரால் புராணங்கள் வழங்குகின்றன. நரகம் என்பது ஓர் தனி ஊரல்ல; மோக்ஷமும் அப்படியே. புராணங்களில் கூறியுள்ளவாறு நரகம் என்பது மலமயமான காடல்ல. நரகம் என்பது இந்த உடலோடு வாழ்கின்றது. இவ்வுண்மையை "பொறியில் வாழ் நரகமெல்லாம் புல்லெழுந் தொழியுமன்றே" என்ற தொண்டரடிப் பொடிகளின் வாக்கே உணர்த்துகின்றது. "பொறி வாயிலைந்தவித்தான்" என்ற திருக்குறளின் கருத்தும் இதுவேயாகும். ஆதலின் நமது சிற்றறிவிற்கு எட்டாத விஷயங்களைக் குறித்து பெரியாரிடத்தில் ஆத்ம விசாரம் பண்ணவேண்டும். வீணில் விதண்டாவாதம் புரிதல் அழகாகாது.

## பயனில சொல்லாமை.

பல்லார் முனியப் பயனில சொல்லுவா
னெல்லாரு மெள்ளப் படும் (திருக்குறள்)

"அறிவுடையார் பலருங் கேட்டு வெறுப்பப் பயனிலவாகிய சொற்களைச் சொல்லுபவன் எல்லாராலும் இகழப்படுவான்" ஆகையால், அதிகமாக நினை; குறைவாகப்பேசு; பிறர் சொல்லுவதை ஒருமுறைக் கிருமுறை கவனமாகக் கேட்டுக்கொள்; இயன்ற அளவு உன் பதில் சுருக்கமாகவே இருக்கட்டும். அதற்காகத்தான் இறைவன் இரண்டு காதுகளையும் ஒரு வாயையும் கொடுத்திருக்கிறார். இதைக் கவனி.

# வேண்டுவது வீர வாழ்க்கை.

(சாமி. சிதம்பரனார்.)

வீரர்கள் என்பவர் யார்? என்பது சிறு கேள்வி. இதற்கு விடை கூறுவது எளிது. யாரும் உடனே கூறிவிடுவார்கள். "உடல் வலிமை மிகுந்து அஞ்சா நெஞ்சமுடன், படைகள் தரித்துப் போர்செய்கின்றவர்கள் வீரர்கள்" என்பது சாதாரண விடை. இதுவே யாவருக்குந்தெரியக்கூடியது. தற்காலத்தில் விளங்கும் வீரம் இதுதான். இத்தகைய வீரச் செயலிலேயே உலகம் விரைந்து செல்கின்றது. அந்நிய நாடுகளுடன் போர் புரிவதற்கு யுத்தக் கப்பல்கள் கட்டுவதும், புதுப்புது வகையான ஆகாய விமானங்கள் கண்டு பிடித்து அதன் மீது ஏறிச்சென்று பகைவர் நாட்டின் மீது குண்டு போடுவதும், புதுப்புது பீரங்கிக் குண்டுகள் கண்டு பிடிப்பதும் வீரம எனக் கருதப் படுகின்றன. இன்னும் நமது நாட்டில் கோழிச்சண்டை விடுவதும், ஆட்டுச் சண்டை விடுவதும், மாடுபிடிப்பதும், தேங்காய்ச் சண்டை விடுவதும் வீரமாகக் கருதப்படுகின்றன. தடிகொண்டு போர் புரிவதும், வாள்கொண்டு போர்புரிவதும், பலங்கொண்டு ஒருவரோடொருவர் சண்டை செய்வதும் வீரமென்றே எல்லோராலும் கொள்ளப் படுகின்றன. ஆனால் இவை யெல்லாம் வீரம் அன்றென்று நாம் கூறவரவில்லை. இவையும் வீரத்தின் ஒரு பகுதிகளே.

உடல் வலிமையாற் செய்யும் வீரச் செயல்களைவிட, மனோ வலிமையாற் செய்யும் வீரச் செயல்களே சிறந்தனவாகும் என்பது எமது கொள்கை. இது புதிய கொள்கை யன்று. நமது தமிழ்ச் சான்றோர் கொண்டிருந்த கொள்கை யிதுவே. உடல் வலிமையாற் செய்யும் வீரச்செயல் நிலைத்திருப்பதன்று. மனோ வலிமையாற் செய்யும் வீரச்செயல் என்றும் நிலைத்து நிற்கும்.

உடல் வலிமையால் வீரச்செயல் செய்கின்றவர்களுக்கு, மனோ தைரியம் இருந்தே யாகவேண்டும். மனோதைரியம் இன்றேல் உடல்வலிமையாற் பயன் இல்லை. உடல் வலிமையற்ற ஒருவன் தனது மனோ வலிமையால், உடல் வலிமையுள்ள ஒருவனை வெற்றி கொள்ளுவது திண்ணம். முன்னாளில் இருடிகளுக்கு உலகம் கட்டுப்பட்டு நடந்ததாகப் பழங்கதைகள் கூறுகின்றன.

மனோவலிமை என்பது என்ன? கொண்ட கொள்கையை விடாதிருப்பதுதான். "மூர்க்கனும் முதலையும் கொண்டது விடா" ஆதலால் கொண்ட கொள்கையை விடாதிருத்தல் மூர்க்கத்தன மென்று சிலர் கொள்ளலாம். அதுவுஞ் சரிதான். "தான் பிடித்த முயலுக்கு மூன்றே கால்" என்பது ஒரு பழமொழி. அதுபோல் தான்கொண்ட கொள்கை தவறாயிருப்பினும், அதை விடாதிருப்பர் சிலர். அவரே மூர்க்கர் எனப்படுவார். அவர்களுக்கே முதலைத்தன்மையைப் போன்ற மூர்க்கத் தன்மை பொருந்தும்.

நாம் கூறும் கொண்டது விடாமை யென்பது வேறு. கொள்கை ஒவ்வொருவருக்கும் வேண்டும். அதுதான், ஒருவன் தன் வாழ்நாளில் உலகிற்கு உபகாரமாக இன்னது செய்து முடிப்பேன் எனத் துணிதல். அது உண்மையான கொள்கையாக இருக்கவேண்டும். மக்களுக்கும நலந்தருவதாக இருத்தல் வேண்டும். மக்களுக்கு விடுதலை அளிக்கக் கூடியதா யிருத்தல்

வேண்டும். பகுத்தறிவுடையவர்களால் பாராட்டக்கூடியதாயிருத்தல் வேண்டும். தனக்கும் தன் மதிப்பைத் தரக்கூடியதாயிருத்தல் வேண்டும். அத்தகைய கொள்கையை மேற்கொண்டு வாழ்வது மக்கள் கடமை. இக்கொள்கை யுடையவர்கள் தங்கள் கொள்கையை விட்டுக் கொடுப்பார்களானால் வீரர்கள் அல்லர்.

கோழைகள் என்பவர்கள் யார்? கொள்கையன்றி யிருப்பவர்கள். சமயத்திற்குத் தக்க வேடம் புனைபவர்கள். தமது கொள்கை நிறைவேறா விட்டாலும் உயிர் வாழக்கருதுபவர்கள். மேற்கொண்ட கொள்கையை உயிர் விட்டேனும் நிறைவேற்றுவதே வீரச்செய்கை.

இச்சமயத்தில் நமக்கு ஒரு பாட்டு நினைவுக்கு வருகின்றது. அதாவது:—

தம் உயிர்க்கு உறுதி எண்ணார் தலைமகன் வெகுண்ட போதும்
வெம்மையைத் தாங்கி நீதி விடாது நின்று உரைக்கும் வீரர்
செம்மையில் திறம்பல் செல்லாத் தோற்றத்தார் தெரியுங்காலை
மும்மையும் உணரவல்லார் ஒருமையே மொழியும் நீரார்.

என்னும் அருமையான பாடலேயாகும். இது கல்வியிற் சிறந்த கம்பரால் கூறப்பட்டது. இப்பாடல் அமைச்சர்களின் வீரத்தன்மையைப் பற்றிக் கூறுகின்றது. பொருளைச் சிறிது சிந்தியுங்கள்!

“தலைவனாகிய அரசன் கோபித்த காலத்திலும், அவன் தன்னைக் கொல்ல முன் வந்த காலத்திலும், தன்னுடைய உயிர் நிலைக்க வேண்டுமென்று நினைக்காதவராவர். அவனுடைய கொடுமையைத் தாங்கிக் கொள்வர். நீதியை ஒருசிறிதும் தவற விடாமல் உறுதியுடன் நின்று உரைக்கும் வீரர்கள். நல்ல செயல்களிலிருந்து ஒரு சிறிதும் தவறாத தெளிந்த அறிவுடையவர்கள். இறப்பு, நிகழ்வு, எதிர்வு என்னும் முக்காலச் செயல்களையும் ஊகித்துணர வல்லவர்கள். உண்மைக் கொள்கையையே விடாமற் கூறுந் தன்மை யுடையவர்கள்” என்பது மேற்கூறிய பாட்டின் பொருள். இத்தகையாரன்றோ வீரர். இத்தகைய வீரந்தான் நாம் வேண்டுவது. நற்கொள்கை நம்மிடத்தில் இறத்தல் கூடாது. நாம் அக் கொள்கையிலேயே இருக்கவேண்டும். கொள்கையிலேயே இறக்க வேண்டும். அதுதான் ஆண்மை.

மேடைப் பேச்சு பேசும் வீரர்கள் பலர். அவர்கள் தங்கள் பேச்சினால் வீரர்கள் என்று காட்டிக் கொள்வார்கள். “டம்பாசாரியின் பொடிப்பட்டையைத் திறந்துபார்த்தால் வெறும் பட்டை” என்பதொரு பழமொழி. இதை மேடைப்பேச்சு வீரர்கள்பால் காணலாம். நாம் இத்தகைய வீரத்தை ஒரு சிறிதும் விரும்பவில்லை. பேச்சு வீரம் நமக்கு வேண்டாம். கொள்கை வீரம் வேண்டும். செய்கை வீரம் வேண்டும்.

தெளிந்த அறிவினால் தோன்றியதும், தூய்மையானதா யிருப்பதும், மக்கள் மாண்பை உணர்த்த வல்லதும் ஆகிய உயர்ந்த கொள்கைகளை மேற்கொண்டு அதன் பொருட்டு வாழ்க்கை நடத்தவேண்டும். உண்டு உடுத்து உயிர்வாழ்ந்து இறப்பதுமட்டும் நமது கடமையன்று. நம்மிடம் அறிவிருக்கின்றது; ஆற்றல் இருக்கின்றது; செய்யுந் திறமை யிருக்கின்றது; ஆனால் வேண்டுவது உறுதியே. அதைத்தான் நாம் வீரம் என்று விளம்புகின்றோம். அதை எளிதிற் பெறலாம். ஆகையால் யாவரும் உண்மையாகிய உறுதியென்னும் வீரவாழ்க்கையை மேற்கொள்ள முயலுவோம்.

## நட்சத்திர மண்டல சமாச்சார போக்கு வரத்து

பூமியைப் போலவே சந்திரன் அங்காரகன் முதலிய பெரிய நட்சத்திரங்களிலும் தாவரங்களும் காடு மலைகளும் மற்ற ராசிகளு மிருப்பதுடன், மானிடரு மிருப்பதாகப் பல விஞ்ஞான சாஸ்திர ஆராய்ச்சிக்காரர்கள் விளம்புகின்றனர். மேலும் நட்சத்திர மண்டலத்திற்கு பூமியிலிருந்து பிரயாணம் செய்யும் சாதனங்களைக் குறித்தும் ஆராய்ச்சி செய்யப்பட்டு வருவதுடன் காற்றுக்கு மேலுள்ள அந்தரத்தைக் கடக்கக்கூடிய வசதியுள்ள ஆகாய விமானத்தைக் கண்டு பிடிக்கவும் சில விஞ்ஞான ஆராய்ச்சி நிபுணர்கள் தம் வாணாளைக் கழித்து வருகின்றனர். இதன் சம்பந்தமாகப் பலவகை ஆகாய விமானங்களும் கண்டுபிடிக்கப்பட்டு முக்கியமாகச் சீர்வாண ஆகாய விமான மென்னும் நூதன சாதனம் அந்தரத்தையும் கடந்து செல்லக்கூடு மென்று அறிஞர் ஜூல்ஸ் வெர்னே என்பவர் கூறுகின்றார். ஆகாயத்தில் பறக்கக்கூடு மென்பதும், கடலில் கப்பல்கள் ஓடக்கூடு மென்பதும், கம்பியில்லாத் தந்தி வசதிகளும் ஒரு காலத்தில் கனவு காணும் விஷயங்களென்று எள்ளனம் செய்யப்பட்ட போதிலும் அவை இக்காலத்தில் கண் கூடாகக் காணப்படும் பிரத்தியக்ஷ விஷயங்களாகி யிருக்கின்றன. மனிதர் முயற்சிக்கு மிஞ்சியது ஒன்றுமில்லை என்றே சொல்லவேண்டும்.

இனி, நட்சத்திர மண்டலத்துடன் சமாச்சார போக்கு வரத்து சாத்தியமாகுமா என்பதைக் குறித்தும் பல அறிஞர்கள் ஆராய்ச்சி செய்து வருகின்றனர். சில வருடங்களுக்குமுன் கை கூடாதவை என்று எள்ளனம் செய்யப்பட்ட பல சாதனங்களைப் போன்று இவையும் ஒருகாலத்தில் வெற்றியாகக் கூடுமா? இத்தகைய சாதனம் சாத்தியமானதுதா னென்று பலர் கூறுகின்றனர். சமீபத்தில் லண்டனிலுள்ள டாக்டர் எச். எம். ராபின்சன் அங்காரகனிலுள்ள ஒரு பெண்ணுக்கு ஆகாயத் தந்தி மூலமாகச் செய்தி யனுப்ப விரும்பித் தமது செய்தியைப் பிரிட்டிஷ் தபால் ஆபீசுக்குக் கொண்டுவந்து கொடுத்தார். தபால் ஆபீஸ் அதிகாரிகளும் வார்த்தைக்கு இவ்வளவு கட்டணமென்று கணக்குத் தீர்த்துப் பணம் வாங்கிக்கொண்டு செய்தியை யனுப்ப ஏற்றுக் கொண்டதை யறிந்து பலருக்கு அளவற்ற வியப்புண்டாயிற்று. அந்தச் செய்தியும் அங்காரகன் அல்லது செவ்வாய் என்னும் நட்சத்திரத்திலுள்ள ஒரு பெண்ணுக்கு ஆகாச தந்திமூலம் ரக்பி என்னு மிடத்திலுள்ள ஆகாசதந்தி ஸ்தாபனத்தி லிருந்து அனுப்பப் பட்டது. ஆயினும் டாக்டர் ராபின்சனின் சோதனையைக் குறித்து ஆராய்ச்சிக்காரரும் ஆவியோடு பேசும் கொள்கையில் நம்பிக்கை யுடையோர் சிலரும் தவிர மற்றவர்கள் யாரும் முக்கிய கவனம் செலுத்தியதாகச் சொல்ல முடியாது.

டாக்டர் ராபின்சன் தாம் அங்காரகன் வாசியான அழகிய மங்கைக்கு அனுப்பிய ஆகாசத்தந்திக்கு இன்னும் பதிலை எதிர்பார்த்துக்கொண்டிருப்பினும் ஆஸ்லோ என்னுமிடத்தைச் சேர்ந்த ஆசிரிய ஸ்டியார்மர் என்பவர் டச்சு ஆகாசத் தந்தி ஸ்தாபனத்திற்கு அந்தரத்திலிருந்து செய்தி யொன்றின் எதிரொலி வந்ததாகக் கூறக்கேட்டு அனைவருக்கும் அளவற்ற வியப்புண்டாயிற்று. விஞ்ஞான ஆராய்ச்சி விற்பன்னரான ஆசிரியர் ஸ்டியார்மர் இத்தகைய அற்புதமான செய்தியின் எதிரொலியை இரண்டுதரம் கேட்டதாகக் கூறுகின்றார். அச்செய்தியின் எதிரொலி முதலில் ரக்பி ஆகாசத்தந்தி ஸ்தாபனத்திலிரு

ந்து அனுப்பப்பட்டபோதும் மற்றும் நெடுநேரத்திற்குப் பின்னும் கேட்டதாகக்கூறுகின்றார். இரண்டாந்தரம் அச்செய்தியின் எதிரொலி கேட்டபோது முதல்தரம் அனுப்பிய செய்திக்கும் இரண்டாம்தரம் கேட்ட செய்திக்கும் மத்தியிலிருந்த நேரத்திற்குள் அச்செய்தி ஆகாசத்திற்கு அப்பாலுள்ள அந்தரத்தைக் கடந்து மீண்டும் பூமிக்கே திரும்பியிருக்கக் கூடுமென்றும் கூறுகின்றார். பிரபல ஜர்மன் விஞ்ஞான விற்பன்னரும், ஆகாசத் தந்தி வசதியைக் குறித்து அரிய ஆராய்ச்சிகள் பல செய்து வருபவருமான கவுண்ட் ஆர்க்கோ என்பவர் நட்சத்திர மண்டலத்துடன் சமாச்சாரப் போக்குவரத்து நடத்துவது சர்வ சாத்தியமென்றுதான் கூறுகின்றார். டாக்டர் ராபின்சன் அனுப்பியது போன்று அங்காரகனில் வசிப்பவர்களுக்குச் செய்தி யனுப்புவது சாத்தியமே யாயினும் ரக்பி ஸ்டேஷனிலுள்ள ஆகாசத் தந்தி ஸ்தாபனத்திலுபயோகிக்கப்படும் நீண்ட அலைகள் பூமியின் மேற்பரப்பைச் சுற்றி நிற்குமேயன்றி ஆகாசத்திலும் நெடுந் தூரத்திற்கு ஊடுருவிச் செல்ல முடியாதாகையால் அவை அந்தரத்தையும் அணுக முடியாதெனக் கூறுகின்றார். எனினும் சில வருடங்களுக்கு முன் கருதப்பட்டதுபோ லல்லாமல் தற்போது ஆகாசத்தில் அந்தரத்தையும் கடந்து மின்சார அலைகளின் மூலமாய் ஆகாசத் தந்திச் செய்திகளை அங்காரகன் முதலிய நட்சத்திரங்களுக்கும் அனுப்புவது சர்வ சாத்தியந்தானென்று கூறுகின்றார். குறுகிய அலைகளின் மூலமாய்ச் செய்தி யனுப்பும் முறையும் (ஷார்ட் வேவ் ஸிஸ்டம்) மற்றும் கிரணங்கள் மூலமாகச் செய்தி யனுப்பும் முறையும் (பீம் ஸிஸ்டம்) தான் இத்தகைய முடிவுக்கு வருவதற்கு ஆதாரமாகக் கூறுகின்றார். வெளிச்சத்தின் வேகத்தை ஆதாரமாகக்கொண்டு ஆராய்ச்சி செய்ததன் பலனாகக் குறுகிய அலைகளின் மூலமாக ஆகாசத்தைக் கடந்து அந்தரத்தை ஊடுருவிச் செல்லத்தக்க மின்சாரச் செய்திக ளனுப்புவது சாத்தியமென்று கண்டுபிடிக்கப்பட்டிருக்கின்றது. தற்போதுள்ள ஆகாசத் தந்தி ஸ்தாபனங்களிலிருந்து வெளிப்பட்டு மின்சார சக்தியின் அலைகள் ஆகாசத்தைக் கடந்து அந்தரத்தை ஊடுருவிச் செல்லக் கூடுமாவென்று பல சோதனைகளின் மூலமாகத்தான் முடிவுசெய்யப் படக் கூடும். அன்றியும் ஆகாசத் தந்திகளைக் கிரகிக்கும் கருவிகளிலும் பல அபிவிருத்திகள் செய்யப்பட்டு மிருப்பதால் நட்சத்திரங்களின் உஷ்ணங்களையும் அளவிடக்கூடிய வசதிகளு மேற்பட்டு மிருக்கின்றது. பின்னும் இத் துறைகளில் இடைவிடாது ஆராய்ச்சி செய்யப்படுவதினால் கூடிய சீக்கிரத்திலேயே நக்ஷத்திர மண்டலத்துடன் சமாசாரப் போக்குவரத்து நடத்துவது கைகூடுமென்பதில் சந்தேகமில்லை என்று கவுண்ட் ஆர்க்கோ குறிப்பிட்டார்.

## வாழ்வு முழுவதும் கேள்வி.

சிறுவனைப் பார்த்தால் 'எந்த வகுப்பில் வாசிக்கிறாய்? என்பது. சிறுமியையும் வாலிபனையும் பார்த்தால் 'விவாகமாயிற்றா?' என்பது. 'ஆம்' என்றால் "குழந்தைகள் எத்தனை?" என்பது அடுத்த குட்டிக் கேள்வி. இப்படி யார் யாரை எங்கு பார்த்தாலும் கேள்விகள் கேட்பதுதான். இந்தப் பிறவியும் கேள்விக் கிடமானதுதான்.




(ஆசிரியர் A. சுருளியாண்டி கௌட.)

"சீரைத் தேடின் ஏரைத் தேடு" என்றார் ஔவையார். இப் பரந்த உலகின் கண் வாழும் சகல உயிர்ப் பிராணிகளும் உயிருடன் வாழ்தற்குரிய இன்றியமையாப் பொருள் உணவேயாம். இவ் வுணவைப் பெற்றுய்யும் பொருட்டு, மனிதனே யன்றி மற்றைய விலங்காதிகளும் உழைக்க வேண்டியது அவசியமெனக் கூறாமல் விளங்கும். இத்தகைய உழைக்குந் தொழிலுக்கே விவசாயம் அல்லது கிருஷி என்று பெயர்.

நம் தேசத்தில் வசிக்கும் ஜனங்களில், சிலர் உத்தியோகம் செய்தும் சிலர் கைத்தொழில், வர்த்தகம் முதலியன செய்தும் ஜீவிக்கின்றனர். ஆயின் பெரும் பாலார் "மேழிச் செல்வம் கோழை படாது" என்றபடி விவசாயம் செய்து பிழைக்கின்றனர்.

> "மேழி பிடிக்குங்கை ; வேல்வேந்தர் நோக்குங்கை;
> ஆழி தரித்தே அருளுங்கை ;—சூழ் வினையை
> நீக்குங்கை ; என்றும் நிலைக்குங்கை ; நீடுழி
> காக்குங்கை காராளர் கை"

என்றவாறு, உழவுத் தொழிலே எத்தொழிலினும் சிறந்தது. இது பற்றி யன்றோ, வள்ளுவரும்

> " உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார் மற்றெல்லாம்
> தொழுதுண்டு பின் செல்பவர்"

என்றார். உழவன் ஒருவருக்கும் அடிமையா யிராமல் சுயேச்சையாய் வாழலாம் ; அவன் பாவம் செய்ய ஏதுவில்லை. குடியானவன் உழுதோ அல்லது வேறு வகையிலோ பயிர் செய்யாவிடின் பணக்காரனுக்கு எங்ஙனம் உணவு கிட்டும். ஆகலின், உழுதுண்டு வாழ்தலே உயர்வு.

"எந் நாளும், காப்பாரே வேளாளர் காண்" என்றார் கவிச் சக்ரவர்த்தி கம்பர். உழவரைத் தாழ்வாக மதிப்பவர் அறிஞராகார். ஏனெனின், உழவர் இல்லையேல் ஓர் பெரிய அரசனும் உயிர் பிழைத்திருக்க முடியாதன்றோ ?

குடியானவர் தினந்தோறும் புலங்களுக்குச் சென்று நெற்றி வியர்வை நிலத்தில் விழுமாறு உழைப்பர். ஆதலின் அவர்கள் அரோக திடகாத்திரராய் வாழ்வார்கள். பாடு பட்டுத் தேடிய பொருளை அவர்கள் வீண் செலவு செய்து அழிக்க மாட்டார்கள். பொருளின் அருமை பெருமைகளை யறிந்து செட்டாக வாழ்ந்து, தான தருமங்கள் இயற்றுவர்.

"சுழன்றுமேர்ப் பின்ன துலக மதனால்
உழன்று முழவே தலை" — குறள்

## விவசாயப் பழமொழிகள்

அழுது கொண்டிருந்தாலும் உழுது கொண்டிரு.
அகல உழுவதினும் ஆழ உழுவதே மேல்.
ஆடிப் பட்டம் தேடி விதை.
ஆனிக் கார் மூல தனம்.
இளைத்தவன் எள்ளை விதை; கொழுத்தவன் கொள்ளை விதை.
ஈர விதைப்பே சீரிய தாகும்.
உரமின்றி உழுபவர்க் குறு பயன் இன்றாகும்;
தர மின்றேல் அவ்வுரமும் தருபலன் தாராவே.
ஊதியம் நாடின் உழவை நாடு.
எள்ளு விதைத்தால் கொள்ளு முளைக்குமா?
ஏர்த் தொழிலே சீர்த் தொழில்.
ஐயமின்றி ஆற்றுவாய் உழவு.
ஒல்காச் செல்வம் உழவுத் தொழிலே.
ஓதுவோ னெல்லாம் உழுவோன் தலைக் கடை.

### வைர சம்பந்தி.

மனைவி—(கணவனைநோக்கி) நமது இராஜாமணிக்குக் கல்யாணம் இந்த வருடமாவது நடத்தவேண்டாமா?

கணவன்—ஆமாம்! எப்படியும் இந்த வருடம் கட்டாயம் செய்துவிடவேண்டு மென்பதுதான் எனது உத்தேசமும், நல்ல வரன் கிடைக்கட்டும்.

மனைவி—நல்ல பெரிய இடமாய்ப் பாருங்கள்! சம்பந்திகள் வந்தாலும் காதிலும் கழுத்திலும் நல்ல வைரம் ஜொலிக்கக்கூடிய அப்படிப்பட்ட சம்பந்தியா யிருக்கவேண்டும்.

கணவன்—ஐயோ! அவர்களுக்குக் காதிலும் கழுத்திலுமட்டுமின்றி நெஞ்சிலும் வைரம் இருக்கும். எருதின் புண் காக்காய்க்குத் தெரியாது. அதுபோல நம்முடைய ஸ்திதியை அறியாமல் அவர்கள் வைரம் கேட்பார்கள். இல்லாவிட்டால் இருவருக்கும் நீடித்த வைரம் ஏற்பட்டுவிடும்.

## அறிஞரின் அமுதமொழிகள்

K. S. மணவாள ஐயங்கார்.

1. Never trust to another what you should do yourself.
உடையவன் பாராத பயிர் ஒரு முழங்கட்டை.

2. To throw pearls before swine. *Bible.*
கழுதை யறியுமோ கற்பூர வாசனை.

3. The tears of the oppressed prove fatal to the oppressor.
ஏழை அழுத கண்ணீர் கூரிய வாளொக்கும்.

4. Arguing with a man who has no reason is administering doses of medicine to a dead body.
கழுதைக் குபதேசம் காதிலே ஓதினாலும் அவயக் குரலேயன்றி யங்கொன்றுமில்லை.

5. He conquers all who conquers self. *Vivekananda.*
தன்னைச் சரிப்படுத்திக் கொள்பவன் உலகைச் சரிப்படுத்தியவனாவான். (தானடங்கத் தன்குல மடங்கும்.)

6. The learned know the value of the learned.
கற்றாரைக் கற்றாரே காமுறுவர் (பாம்பறியும் பாம்பின்கால்)

7. We must eat to live but not live to eat.
வாழ உண், உண்ண வாழேல்.

8. He conquers who endures *Persius.*
பொறுத்தவர் பூமி யாள்வார்.

9. Manners must adorn knowledge
கற்க கசடறக் கற்பவை கற்றபின், நிற்க வதற்குத் தக. (குறள்)

10. No man can be wiser than destiny.
ஊழிற் பெருவலி யாவுள, மற்றொன்று சூழினும் தான்முந் துறும். (குறள்)

### துட்டரைக் கண்டால் தூர விலகு.

மண்குடம் கல்லின் மீது பட்டாலும், கல் மண்குடத்தின் மீது பட்டாலும் குடமே உடையும். துஷ்டர்களோடு நீ சேர்ந்தாலும், உன்னோடு துஷ்டர்கள் சேர்ந்தாலும் உனக்கே ஆபத்து; உன் மானமே கெடும், அவர்கட்கு ஐம்பதோடு ஐம்பத்தொன்று தான்.






## கிருஷ்ணாவலிங் அல்லது துப்பறியும் சீடன்.

(502-ம் பக்கத் தொடர்ச்சி)

ஆரணி-குப்புசாமி முதலியார்.

குள்ளன் அறையில் தீபத்தை யேற்றிக்கொண்டேயிருக்கையில் மறுபடி மணியடித்ததும் முரடன் உள்ளேவந்து "ஓகோ எங்கும் சோதிமயமாக்குகிறாய் போலிருக்கிறது" என்றான்.

குள்ளன் "ஆ! பிச்சா நீயா? ஆம் விளக்குகளை யேற்றுகிறேன். இருட்டு எனக்குப் பிடிக்கிறதில்லை.

பிச்சன்:—நீ வேலை செய்தால் கொஞ்சகாலம் அப்படித்தான் உன் வழக்கம்-பிறகு எப்போதும் போலாய் விடுவாய்.

குள்ளன்:—அது சரிதான். என் பலகீனத்தை நான் ஒப்புக்கொள்ளுகிறேன். ஆனால் அந்த சமயத்தில் நான் தீரத்தோடு என் பங்கு வேலையைச் சரியாய்ச் செய்தேனோ யில்லையோ?

பிச்சன்:—சரியே. அந்தப்பயல்கள் சீக்கிரம் வந்தால் நலம். நான் துரிதமாய் என் இரகசிய விடத்திற்குச் சென்றுவிடவேண்டும்.

குள்:—சீக்கிரம் வந்து விடுவார்கள். ஆயினும் உனக்கு இன்னும் இரகசிய விடம் அவசியமென்று நினைக்கிறாயா?

பிச்:—என்னமோ தெரியாது. எதற்கும் சாக்கிரதையிலேயே யிருப்பது நலம். என்றால் கூடிய சீக்கிரத்தில் நான் கரிசப்பன் வீட்டிற்குப் போய்விட வேண்டும். நம்மேல் சந்தேகம் வரும் என்று நான் நினைக்கவில்லை. ஆயினும் இப்போது நான் செல்வவந்தனாகவும் மரியாதையுள்ளவனாகவும் ஆகப்போகிற சமயத்தில் ஆபத்துக்கு இடந்தராமல் சாக்கிரதையாகவே யிருக்கவேண்டும் அல்லவா?

குள்:—"ஆம்! நாம் இருவரும் குருமார்களாய்விடலாம்" என்று கூறியதும் இருவரும் நகைத்துக் கொண்டார்கள்.

அதேசமயம் எச்சரிக்கை மணியடித்ததும் ஒரு நெட்டை மனிதன் உள்ளே வந்தான். அவன் நேர்த்தியான உருவமுடையவன். ஆனந்தவலிங் அவனை யெப்போதும் கண்டதேயில்லை. அவன் ஆனந்தவலிங் மறைந்து நிற்கும் இடத்தருகில் சென்று தன் நெடுஞ் சட்டையைக் கழற்றி உடைகள் மாட்டியிருக்கும் இடத்தில் காலியாயிருந்த இடத்தில் மாட்டினான். குள்ளன் அவனைக் கண்டதும் பழகியவன்போல் வா கிட்டு!" என்றான். மறுபடி மணியடித்தது.

பிச்சன் "முனியன் வருகிறான்" என்றான். அச்சமயம் ஆனந்தவலிங் சட்டென்று அந்த விடத்தை விட்டு விலகி நெடுஞ் சட்டையின் பின்னால் மறைந்துகொண்டான். முன் அறையின் கதவிற்குச் சமீபத்திலிருக்க வேண்டுமென்பது அவன் கருத்து. பிச்சன் கூறிய மாதிரியில் முனியனே கடைசியாய் வருகிறவன் என்று ஆனந்தவலிங் தெரிந்துகொண்டான்.

நெடுஞ்சட்டை பூராய் மறைந்துகொள்ள முன் இடத்தைவிட மிக்க அனு கூலமாயிருந்தது. ஆனால் ஆட்களைப் பார்ப்பதற்குக் கொஞ்சம் அனுகூலக் குறைவாயிருந்தது.

கிட்டன் என்பவன் குள்ளன் பிச்சன் இருவரையும் நோக்கி "லிங் காரத்தை நடத்திவிட்டீர்களல்லவா? எல்லாம் நான் கூறியபடியே நடந்து விட்டதல்லவா?" என்றான்.

முனியன்:—"நீங்கள் பேசும் சங்கதிதா னென்ன?" என்றான்.

கிட்டு மெதுவாய் நகைத்தான்.

பிச்சன் முனியனை நோக்கி "நேற்று நீ சென்றபின் துப்பறியும் கிருஷ்ணலிங் வேதம்மாள் வீட்டிற்குள் நுழைந்து அலமாரியின் இரகசியத்தை யறிந்து கொண்டதோடு உன் பெயரையும் தெரிந்து கொண்டான் ..." என்றதே,

முனியன் கோபத்தோடு "யாருடைய முட்டாள் தனத்தால் என் பெயர் வெளி வந்தது?" என்றான்.

பிச்சன்:—"அட யாருடைய முட்டாள்தனமோ. நமது இரகசியம் அவனை விட்டு அப்புறம் செல்லாதிருக்கவும், அவனாலும் ஒரு தீங்கும் நமக்கு நேரிடாதபடிக்கும் வேலை செய்யத் தெரியும்" என்று கெர்ச்சித்துக் கூறினான்.

முனியன் ஆவலோடு "என்ன நீ கூறுவதன் அர்த்தம்? என்ன செய்தீர்கள்?" என்றான்.

கிட்டன்:—"என்ன செய்வது! சங்கதிமட்டும் நம்மைவிட்டு வெளிப் போகப் போகிறது பத்திரம். கிருஷ்ணலிங்கை வேறு உலகிற் கனுப்பி விட்டோம்.

முனி:—எவ்விதமாய்?

பிச்ச:—கொஞ்சம் பொறு. குள்ளனும் நானும் அவன் மண்டையை யுடைத்துக் கத்தியால் குத்திக் கொன்றோம்.

முனி:—கொன்றே விட்டீர்களா.

கிட்டு:—மற்றபடி யென்ன. ஆனால் முனியா நீ அதற்காகச் சற்றும் பயப்பட வேண்டாம். ஒருவரும் அதைக் கண்டு பிடிக்க முடியாது. இப்போது நான் கூறுவதைக் கேள். நாளைக்கு ஒரு பெரிய சாமார்த்திய வேலைக்கு ஏற்பாடு செய்துவைத்திருக்கிறேன். நாம் மற்ற விஷயங்களைக் கவனிக்கு முன் உடனே கவனிக்கவேண்டியவை இரண்டு முக்கியமான விஷயங்களிருக்கின்றன. ஒன்று இராஜவேல் நமக்குக் குறுக்கு நிற்கிறான். அவனை யொழித்துவிடவேண்டும். இரண்டாவது மனோன்மணி. கொஞ்ச மிருங்கள் என் ஜேபியிலிருக்கிற ஒரு கடிதத்தைக் கொண்டு வருகிறேன் என்றெழுந்தான்.

அதைக்கண்ட ஆனந்தலிங் அவன் தன் நெடுஞ்சட்டையை நோக்கி வருகிறானென்று அறிந்துகொண்டான். இடமாற அவகாசமில்லை. அகப்பட்டுக்கொள்வது நிச்சயம். ஆயினும் அவன் பல்லைக் கடித்துக் கொண்டு, தொங்கும் சட்டைக்கும் சுவருக்கு மிடையில் ஒடுங்கி நின்றான். கிட்டு என்பவன் தன் சட்டைச் சேபியில் கையிட்டதும் முணமுணத்தான். மறுநிமிடம்

அவன் மிக்க கோபத்தோடு கூச்சலிட்டதை மூவரும்கேட்டு எழுந்து அறைக்குள் ஓடினார்கள். அச்சமயம் ஆனந்தலிங்கின் நிலைமை எவ்வாறிருக்கு மென்பதை யிதை வாசிப்போரே சிந்தித்துக் கொள்ளலாம்,

---

## 9—வது அத்தியாயம்.

ஆனந்தலிங் அப்போதும் அசையவேயில்லை. கிட்டு கூக்சலிட்டதற்கும் அங்கு நடக்கும் குழப்பத்திற்கும் காரணம் இன்னதென்று அவன் நன்றாய் அறிவான்.

பிச்சன்:—என்ன சங்கதி?

கிட்டு "ஒரு கடிதத்தைக் காணோ" மென்று நெடுஞ்சட்டையின் சேபி களில் கையிட்டுப் பார்த்தான். சட்டை அதிகமாய் அசைந்தது. அச்சமயம் இருளாயில்லா விட்டால் ஆனந்தலிங் அகப்பட்டுக்கொண்டேயிருப்பான்.

இக் கள்ளருடைய பயங்கரமான இரகசியங்களை யெல்லாம் எப்படியே னும் கண்டறிய வேண்டுமென்றே யவன் உயிருக்குத் துணிந்து அங்கு ஒளித் துக்கொண் டிருக்கிறான்.

கிட்டு அறைக்குள் வரும்போதே அவன் தன் சட்டைச் சேபியிலிருக்கிற கடிதத்தை எடுக்க வருகிறான் என்றும் அக்கடிதம் முக்கியமான இரகசிய மடங்கியதா யிருக்கவேண்டு மென்றும் அறிந்து கொண்டு அபூர்வமான தைரி யத்தோடும் துணிகரத்தோடும், கிட்டு அருகில் வருவதற்குள் சட்டைச் சேபி களில் தடவி அதிலிருந்த கடிதத்தை யெடுத்துக் கொண்டான்.

முனியன் கிட்டுவை நோக்கி "அக்கடிதத்தில் என்ன சங்கதி யடங்கி யிருக்கிறது?" என்றான்.

கிட்டு:—"அது ஜெயராமன் மீனாட்சிக்கு எழுதியது" என்றான்.

முனியன்:—"சே! அது தானே, கிடக்கட்டும். பிச்சனுக்கு ஏதாவது கூறவேண் டியதா யிருந்தால் அதை முன்னே கூறிவிடு. அவன் போகட்டும். பிறகு நாம் இக்கடிதத்தைப் பற்றி சிந்திக்கலாம். அவன் இங்கு நெடு நேரமிருப்பது ஆபத்தாய் முடியும்" என்றான்.

கிட்டன்:—நல்லது. மனோன்மணி யெங்கிருக்கிறா ளென்று எனக்குக் கொஞ்சம் சந்தேகமாய்த் தெரியும். நான் நினைக்கிற விடத்தில் அவள் இருக்கிறதா யிருந்தால் நாளை நடுப்பகலுக்குள் சங்கதி தெரியும். எதற் கும் ஆயத்தமா யிருக்க வேண்டுமாகையால், நீயும் பிச்சனும் நாளை இரவு 11-மணிக்கு பழைய விடத்தில் ஒரு வண்டியோடு எனக்காகக் காத் துக் கொண்டிருங்கள். முனியா நீ இராஜவேலைப்போல் மாறு வேட மணிந்துகொண்டு வண்டியில் பேசாமல் மறைவாய் உட்கார்ந்திரு. பிச் சன் வண்டியை யோட்டவேண்டும்.

நானாவது உன்னை நேரில் காண்பேன். அல்லது குள்ளனையனுப்புவேன். நான் கூறுவதும் என் நோக்கமும் என்னென்று தெரிகிறதா?

முனியன்:—தெரிகிறது.

பிச்சன்:—எனக்குத் தெரியவில்லை. அதைப் பற்றிப் பரவாயில்லை. என் பங்கு இருபதினாயிரம் வருகிற வரையில் நான் கண்ணை மூடிக்கொண்டு என்ன கூறினும் செய்யச் சித்தமாயிருக்கிறேன். (தொடரும்.)



# வர்த்தமானப்பகுதி

**உலகத்தின் பெரிய கட்டிடம் :—** உலகத்திலேயே மிகப் பெரிய கட்டிடம் போஸ்டனில் கட்டப்படுகிறது. அதில் சுமார் 25,000 மக்கள் வாழலாமாம். அதற்கு 'புது இங்கிலாந்துக் கட்டிடம்' என்று பெயரிடப் போகிறார்களாம்.

⁂

**பூமிக்குள் உயிர்கள் :—** பூமியின் அடியில் சுமார் 3000 அடிக்குக் கீழுள்ள எண்ணெய்ச் சுரங்க ஊற்றுகளில் உயிர்ப் பொருள்கள் காணப்படுகின்றனவாம்.

⁂

**258 வருஷத்திய எரியும் விளக்கு :—** புல்ஹாம் என்னு மிடத்தில் 258 வருஷத்திற்கும் முன்னால் ஏற்றி வைக்கப்பட்டுள்ள ஒரு விளக்கு இன்றைக்கும் எரிந்துகொண் டிருக்கிறதாம்.

⁂

**பெண்ணுக்கும் பெண்ணுக்கும் கல்யாணம்:—** இங்கிலாந்தில் கர்னல்பார்கர் என்று பெயர் வைத்துக்கொண்டு ஆணாக நடித்துவந்த, விலியன் இர்மா வேலரிபார்க்கர் என்னும் மாதைப் பற்றிய ரகசியங்கள் வெளிவந்துள்ளன. சிறு வயதிலிருந்தே அவளுக்கு ஆணாக நடிப்பதில் பெரும் பிரியமுண்டாம். பிறகு ஆணுடைதரித்து ஆல்பிரட்டா எம்மாஹாவர்ட் என்னும் பெண்ணைக் கல்யாணம் செய்துகொண்டு 3 வருஷம் அவளோடு கணவன் மனைவி முறையில் வாழ்ந்தாளாம். அம்மூன்று வருஷங்களிலும் தனது புருஷனாகிய பெண்ணைப் பற்றித் தான் கொஞ்சங்கூடச் சந்தேகித்ததில்லையென ஆல்பிரட்டா கூறுகிறாள்.

**ஒரு வருஷத்தில் 4000:—** போன வருஷம் அமெரிக்காவில் 4,000 ஆகாய விமானங்கள் செய்யப்பெற்றன. இப்போது சுமார் 12,000 மைல்கள் ஆகாய விமானப் பாதைகள் போக்குவரத்து சரியாக நடந்து வருகிறதாம்.

⁂

**ஆண் பெண்ணும், பெண் ஆணும்:-** சமுத்திரத்தில் உற்பத்தியாகும் நத்தைகள் வருஷத்திற்கு 4 முறை பெண்ணாகவும் ஆணாகவும் மாறுகின்றனவாம்.

⁂

**நாய் குரைக்காத நகரம்:-** வியன்னா நகரத்து முனிஸிபாலிடியார் அவ்வூரில் ஒருநாயும் குரைக்கக் (குலைக்க) கூடாதென ஒரு சட்டம் ஏற்படுத்தியிருக்கிறார்கள். அப்படி ஏதாவது ஒருநாய் குரைப்பதைக் கண்டால் அதன் சொந்தக்காரர்களுக்குப் பெரிய அபராதம் போடப்படுமாம்.

⁂

**கருப்புக் கூந்தல்:—** கருத்த கூந்தலுடையவர்கள் சுதந்திரப் பிரியர்களாயும், கோபிஷ்டர்களாயும், பெருத்த தன்னம்பிக்கை யுள்ளவர்களாயும் இருப்பார்களாம். ஆனால் அவர்களால் அவர்களது எண்ணங்களையெல்லாம் மறைத்துக்கொள்ள முடியாதாம்.

⁂

**உலக முழுதிற்கும் ஒரே கடிகாரம்:—** ஒரு ஜர்மானிய யந்திரசாஸ்திரி உலக முழுவதற்குமாக ஒரே கடிகாரம் இருக்கவேண்டுமென்றும், அது காட்டும் மணியை கம்பியில்லாத் தந்தி மூலம் எல்லாதேசத்திற்கும் பரப்பவேண்டுமென்றும் சொல்லுகிறாராம்.

# “ஆனந்தபோதினி” பஞ்சாங்கம்.

**சுக்கில௵ வைகாசிமீ—கலியுகாதி 5031, சாலிவாகனம் 1852,**
**பசலி 1338—கொல்லமாண்டு 1104—ஹிஜரி 1347,**
**இங்கிலீஷ் 1929௵—மேமீ—ஜூன்மீ**

| வைகாசி | மே | வாரம். | திதி. | நக்ஷத்திரம் | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 14 | செவ் | சஷ்28-43 | பூச46-38 | சித்60 | ரிஷபரவி நா-1-8, சஷ்டி |
| 2 | 15 | புத | சப்23-43 | ஆயி43-58 | சித்60 | நவக்கிரகசாந்திசெய்ய |
| 3 | 16 | வியா | அஷ்20-3 | மக42-35 | அ42-35சி | சுபகாரியங்கள் விலக்க |
| 4 | 17 | வெ | நவ17-48 | பூர42-40 | சித்60 | வியாதியஸ்தர் குளிக்க |
| 5 | 18 | சனி | தச17-0 | உத்44-5 | மர60 | சுபகாரியம் விலக்க |
| 6 | 19 | ஞா | ஏகா17-35 | அஸ்47-5 | அ47-5-சி | சர்வ, மத்வ, ஏகாதசி |
| 7 | 20 | திங் | து19-25 | சித்51-10 | பி51-10அ | பிரதோஷம், கரிநாள் |
| 8 | 21 | செவ் | திர22-28 | சுவா56-20 | சி56-20ம | நரசிம்ம ஜயந்தி |
| 9 | 22 | புத | சது26-28 | விசா60 | சித்60 | திருதினஸ்பிருக் |
| 10 | 23 | வியா | ○31-28 | விசா1-58 | சித்60 | ○ பௌர்ணமி |
| 11 | 24 | வெ | பிர36-25 | அனு9-35 | சி9-35ம | வைசாகபகுளம் |
| 12 | 25 | சனி | துதி43-5 | கே16-30 | சித்60 | குளம், கிணறுவெட்ட |
| 13 | 26 | ஞா | திரி49-18 | மூல24-3 | அ24-3சி | தானியம் செலவிட |
| 14 | 27 | திங் | சது55-20 | பூரா31-38 | மர60 | |
| 15 | 28 | செவ் | பஞ்60 | உத்38-50 | அ38-50சி | |
| 16 | 29 | புத | பஞ்1-15 | திரு45-13 | சி45-13பி | |
| 17 | 30 | வியா | சஷ்5-25 | அவி50-30 | சி-50-30ம | |
| 18 | 31 | வெ | சப்8-43 | ச54-35 | சித்60 | |
| 19 | 1 | சனி | அஷ்10-23 | பூர56-20 | ம56-20சி | |
| 20 | 2 | ஞா | நவ10-13 | உத்56-30 | அமி60 | |
| 21 | 3 | திங் | தச8-3 | ரே54-45 | சித்60 | |
| 22 | 4 | செவ் | ஏகா4-5 து58-28 | அஸ்51-35 | சித்60 | |
| 23 | 5 | புத | திர51-23 | பர46-18 | சி46-18அ | |
| 24 | ஜூன் 6 | வியா | சது43-8 | ※கி40-10 | மர60 | கிருத்திகை |
| 25 | 7 | வெ | ● அ34-13 | ரோ33-15 | ம33-15சி | சர்வத்திர அமாவாசை |
| 26 | 8 | சனி | பிர24-53 | மிரு25-58 | சித்60 | சந்திரதெரிசனம் |
| 27 | 9 | ஞா | துதி15-33 | திரு18-45 | சித்60 | பலராம ஜயந்தி |
| 28 | 10 | திங் | திரி6-48 சது58-55 | புன12-5 | அ12-5சி | மாசசதுர்த்திவிரதம், சேக்கிழார்சுவாமி திருநக்ஷத்ரம் |
| 29 | 11 | செவ் | பஞ்52-18 | பூச6-15 | சித்60 | நவக்கிரகசாந்தி செய்ய |
| 30 | 12 | புத | சஷ்47-3 | ஆயி1-45 மக58-55 | சித்60 | சஷ்டி, அவமாகம் [குளிக்க |
| 31 | 13 | வியா | சப்43-38 | பூர57-45 | சி57-45ம | மாடுவாங்க, வியாதியஸ்தர் |

| | | | |
|---|---|---|---|
| சுக் | ராகு | சூ-பு குரு | |
| | 6உ மேஷ— சுக்கிரன் | | செ |
| — | | | — |
| சனி | | கே | |

**PRINTED & PUBLISHED BY N. MUNISAWMI MUDALIAR,**
**AT THE "ANANDA BODHINI" POWER PRESS,**
**LAWYER CHINNATHAMBI MUDALI ST., MADRAS.**